# காற்றில் வந்த கவிதை

பெ. தூரன்




மயிலாப்பூர் :: சென்னை-4.



# முன்னுரை

காற்றிலே நறுமணம் மிதந்து வருகிறது; பறவைகளின் ஒலி வருகிறது; பாட்டும் மிதந்து வருகிறது. ஒலி பெருக்கியின் வல்லமையால் பெரிய வடிவம் எடுத்து வருகின்ற பாட்டை நான் இங்கே குறிப்பிடவில்லை. கழனிகளின் இடையிலே, நாட்டுப் புறத்திலே, வேலை செய்யும் இடத்திலே கள்ளங்கபடமற்ற எளிய உள்ளங்களின் துடிப்பாக வருகின்ற எளிய பாடல்களைப் பற்றியே இங்கு பேசுகின்றேன்.

நாடோடிப் பாடல்கள் ஒவ்வொரு நாட்டின் தனி உடைமை. அவை அந்த நாட்டின் ஆணிவேராக நிற்கும் மக்களின் பண்பையும் ஆர்வத்தையும் மனப்போக்கையும் நிலையையும் பிரதிபலிக்கின்றன.

இந்தப் பாடல்களை யார் உண்டாக்கினார்கள் என்று கூற முடியாது. இவை எப்படியோ தோன்றி நாடெங்கும் உலவுகின்றன.

இந்நூலில் தொகுக்கப்பட்டிருக்கும் நாடோடிப் பாடல்களை நான் பல ஆண்டுகளாக முயன்று சேகரித்தேன். எங்கள் ஊர் ஒரு கிராமம். அங்கே செல்லும்போதெல்லாம் சில பாடல்கள் எனக்குக் கிடைக்கும்.

நான் பல ஆண்டுகள் தலைமை ஆசிரியராகப் பணி செய்தேன். அந்தக் காலத்தில் விடுமுறைக்காகச் செல்லும் மாணவர்களிடம் நான் ஒரு விஷயம் கூறத் தவறமாட்டேன். அவர்களுடைய ஊர்ப்புறங்களில் பாடப்பெறும் நாடோடிப் பாடல்களைக் கேட்டு எழுதிக்கொண்டு வரும்படி அவர்களிடம் சொல்வேன். மாணவர்கள் பலர் ஆர்வத்தோடு பல பாடல்களை எழுதி வந்து கொடுத்தார்கள். அப்பாடல்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

பாடல்களுக்கு விளக்கம் எழுதியதுதான் எனது பங்கு. பாடல்களுக்கு நான் பொறுப்பாளியல்ல. அவற்றை எழுதியவர்கள் யாரென்று எனக்குத் தெரியாது; யாருக்கும் தெரியாது. பாடல்களை எளிதில் உணர்ந்து கொள்ளுவதற்கு உதவியாக இருக்குமாறு குறிப்பாகச் சில கருத்துக்களைக் கூறியிருக்கிறேன். நீண்ட விளக்கம் தேவையில்லை என்பது எனது எண்ணம்.

நாடோடிப் பாடல்களிலும் அவற்றின் எளிய இசையிலும் ஒரு தனிப்பட்ட கவர்ச்சியிருப்பதை இப்பாடல்களைப் படிப்பவர்கள் உணர்வார்கள்.

பெ. தூரன்

# பொருளடக்கம்

# மாட்டுக்காரன் பாட்டு

மாலை நேரம். கதிரவன் மேற்கு வானத்திலே நின்று மேகங்களினிடையே வர்ண ஜாலங்கள் செய்து கொண்டிருக்கிறான். இளங் காற்று வீசுகின்றது. அந்தக் காற்றிலே மிதந்து வருகிறது ஓர் இனிமையான கவிதை. அதைக் கவிதை என்று சொல்லுவதா, பாட்டு என்று சொல்லுவதா, உள்ளத்தின் மழலைத் துடிப்பு என்று சொல்லுவதா-என்ன சொல்வதென்று எனக்குத் தோன்றவில்லை. புலவர்களின் வரையறைகளை வைத்துப் பார்க்கும்போது அது கவிதை என்கின்ற வரம்புக்குள் அடங்குவது அரிது. ஆனால், அதில் கவிதையே இல்லையென்று கூற முடியாது. இசையுடன் கூடிய பாட்டா என்றால் ஆம் என்றுதான் கூறவேண்டும். ஆனால், அந்த இசை பண்பட்டதல்ல. இசையிலக்கண விதிகளுக்கு முற்றிலும் கட்டுப்பட்டதல்ல. என்றாலும் உள்ளத்தைத் தொடும் அம்சம் அதில் இல்லாமலில்லை. சூது வாது தெரியாத ஒருவனுடைய வெளிப்படையான பேச்சிலே இருக்கும் கவர்ச்சி அதிலே இருக்கிறது. உள்ளத்தில் அது நேராகப் படுகிறது,

எளிமையிலே ஓர் இன்பம். வெள்ளைச் சொல்லிலே ஒரு கவர்ச்சி. தெம்மாங்கு இசையிலே ஒரு குழைவு.

அந்தப் பாடலை யார் எழுதினார்கள்? யார் அதற்கு இசை அமைத்தார்கள்? எந்தக் காலத்திலே அது தோன்றி யது? எந்தச் சுவடியிலே அது இடம் பெற்றிருக்கிறது? யாருக்குமே தெரியாது.

வெள்ளை நெஞ்சம் ஒன்று தனது துடிப்பை என்றோ எப்படியோ பாட்டாக வெளியிட்டது. கலைச் சிறப்பை எல்லாம் எண்ணிப் பார்த்துக்கொண்டு அது தன் துடிப்பை வெளியிட முயலவில்லை. உள்ளத்திலே உணர்ச்சிபொங்கியது. அது பாட்டாக வெளியாகியது. அவ்வளவுதான். அது வெளி யாகும்போதே இசை வடிவத்தையும் கொண்டிருந்தது. அந்த இசை சேரும்போதுதான் அதன் உணர்ச்சி முழுவதும் வெளிப்படுவதுபோலப் பட்டது. அதனால் அதுவும் மலரும் மணமும்போலச் சேர்ந்தே பிறந்திருக்கிறது.

பாடிய நெஞ்சம் அந்தப் பாட்டிலே இன்பம் பெற்றது; அமைதியும் பெற்றது.

பிறகு எத்தனையோபேர் அதைப் பாடினார்கள். ஊரெல் லாம் பாடினார்கள். சென்ற இடமெல்லாம் பாடினார்கள்.

அந்தப் பாடல் நாடோடியாக எல்லா இடங்களிலும் பரவிவிட்டது. எங்கே தோன்றிற்று, எங்கே சென்றது என்றெல்லாம் திட்டமாகக் கூற முடியாதபடி அது காற்றிலே கலந்துவிட்டது. மக்கள் உள்ளத்திலே தங்கி விட்டது.

வேலை செய்யுமிடத்திலே அந்தப் பாடலைக் கேட்கலாம். வேலை முடிந்து ஓய்வு பெறும் இடத்திலே அதைக் கேட்க லாம். இன்பத்திலே கேட்கலாம். அப்பொழுது இன்பம் அதிகமாகிறது. துன்பத்திலே கேட்கலாம். அப்பொழுது துன்பம் தணிகிறது.

நாட்டுப்புறத்திலே அந்தப் பாடலைக் கேட்கலாம். கழனிகளிலே கேட்கலாம். கபடமறியாத மக்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் அதைக் கேட்கலாம்.

அப்படிப்பட்ட ஒரு வெள்ளைப் பாடலைத்தான் இந்த மாலை நேரத்திலே நான் கேட்டேன்.

பாடுகின்றவன் ஒரு இடைப் பையன். மாடுகளைப் பகல் முழுவதும் கழனிகளிலே மேய்த்துவிட்டு இப்பொழுது அவன் அவற்றைப் பண்ணைத் தொழுவத்திற்கு ஓட்டிக் கொண்டு செல்லுகிறான்.

அன்றைய கடமை முடிந்துவிட்டது. மாடுகளும் வயிறுற மேய்ந்திருக்கின்றன. இளங்கன்றுகளைப் பண்ணையிலே பிரிந்து வந்த தாய்ப் பசுக்கள் கன்றுகளை நினைந்து மடி சுரந்து வேகமாகச் செல்லுகின்றன. மாடு மேய்க்கும் பையனுக்குத் தனது வேலை முடிந்த களிப்பிலே ஒரு பாட்டுப் பாடத் தோன்றுகிறது. பாடுகிறான்.

ஏதோ ஒரு பாட்டு நினைவுக்கு வருகிறது. அதையே பாடுகிறான்.

பாறையிலே கிணறு வெட்டி ஏலேலோ சாமி
பாத்திக்கொரு நாத்து நட்டு ஏலேலோ சாமி
குட்டைப் பிள்ளை நட்ட நாத்து ஏலேலோ சாமி
குலுங்குதடி சீனிச் சம்பா ஏலேலோ சாமி

பாறையிலே கிணறு வெட்டி ஏலேலோ சாமி
பாத்திக் கொரு நாத்து நட்டு ஏலேலோ சாமி
அத்தை மகள் நட்ட நாத்து ஏலேலோ சாமி
ஆனைச் சம்பா குலுங்குதடி ஏலேலோ சாமி

[நாத்து-நாற்று. பிள்ளை-இளம்பெண். சீனிச் சம்பா, ஆனைச் சம்பா என்பவை நெல்லில் இரண்டு வகைகள்.]

சம்பா நெல் பயிரிட்டிருக்கிருர்கள். நெற் பயிர் பசே லென்று வயலிலே வளர்ந்திருக்கிறது. கதிர்களும் தோன்றி விட்டன. அந்தச் சமயத்திலே காற்றிலே அந்தப் பயிர்கள் குலுங்கிக் குலுங்கி ஆடுகின்றனவாம்.

அந்த இடைப் பையன் எதற்காக இந்தச் சமயத்தில் அந்தப் பாட்டைப் பாடுகிருன்? காரணம் சொல்ல முடியாது. வேலை முடிந்ததால் அவனுக்கு ஒரு மகிழ்ச்சி பிறந்திருக்கிறது. அந்த மகிழ்ச்சியிலே அவனுடைய உள்ளம் அந்த நெற் பயிர் களைப் போலக் கூத்தாடி இருக்க வேண்டும். நெற் பயிர்கள் இளங்காற்றில் வளைந்து வளைந்து ஒயிலாக ஆடுவதைப் பார்த்தவர்களுக்கு அந்த இடைப் பையனுடைய மகிழ்ச்சி நன்ருகப் புலப்பட்டுவிடும். பொருத்தமான பாட்டைத்தான் அவன் பாடியிருக்கிருன் என்றும் நிச்சயமாகக் கூறுவார்கள்.

காற்று வெளியிலே வந்த அந்தப் பாடலையும் அதன் எளிய இசையையும் கேட்டு நான் அப்படியே நின்றிருந்தேன். நாடோடிப் பாடலின் இலக்கணத்தை இப்பாடல் எனக்கு நன்கு தெளிவாக்கியது.

நாடோடிப் பாடல்களிலே மக்களுடைய உள்ளத் துடிப்பைக் காணலாம். அவர்களுடைய ஆசை, அவர்க ளுடைய ஏக்கம், அவர்களுடைய கனவு, அவர்களுடைய உள்ளக் குமுறல்கள் எல்லாம் அப்பாடல்களிலே மிளிர்கின் றன. அதனுல்தான் நாடோடிப் பாடல்களின்மூலம் ஒரு நாட்டின் எளிய பண்பைக் காண முடியும் என்று கூறுகிருர்கள்.

# ஆக்காட்டி

நம் நாட்டில் எத்தனையோ விதமான பறவைகள் இருக்கின்றன. சில பறவைகள் பார்ப்பதற்கு அழகாக இருக்கும். மயில் எவ்வளவு அழகாக இருக்கிறது! சில பறவைகள் இனிமையாகப் பாடும். குயில் கூவும்போது கேட்க ஆனந்தமாக இல்லையா? இப்படி எத்தனையோ வகை யான, பறவைகள் இருக்கின்றன. ஆக்காட்டி என்ற ஒரு பறவையை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? கிராமத்திலே இருப்பவர்கள் அதைப் பார்த்திருப்பார்கள். பட்டணத்திலே அதைப் பார்க்க முடியாது. ஆக்காட்டி நல்ல பறவை. அதற்குக் கால்கள் உயரமாக இருக்கும். அது நிலத்திலே உட்கார்ந்து இரை தேடிக் கொண்டிருக்கும்; பெரிய சத்த மிட்டுக் கூவும்.

ஆக்காட்டி பாறைகளிலே உள்ள பொந்துகளிலே கூடு அமைத்துக்கொண்டு அங்கே முட்டை வைக்கும். குஞ்சுகளை அன்போடு பாதுகாக்கும். இப்படிப்பட்ட ஆக்காட்டி ஒன் றின் சோகக் கதையைப் பற்றி ஒரு நாடோடிப் பாடல் உண்டு.

ஒரு கிராமத்துக்குப் பக்கத்திலே கருங்காடு என்ற பெயருடைய ஒரு காடு இருந்தது. அதிலே ஒரு பெரிய பாறை உண்டு. பாறைக்குப் பக்கத்திலே தண்ணீர் தங்கியிருக்கும் ஒரு குட்டையும் இருந்தது. அந்தக் கருங்காட்டுப் பாறையிலே ஒரு சந்திலே கல்லையெல்லாம் நன்முக ஒதுக்கி வைத்துவிட்டு ஒரு ஆக்காட்டி கூடு கட்டியது. அதிலே நான்கு முட்டை வைத்தது. ஆனுல், ஒரு முட்டை கெட்டுப் போய்விட்டது. மூன்று முட்டைகளிலிருந்து மூன்று குஞ்சுகள் வெளிவந்தன. அந்தக் குஞ்சுகளை அந்த ஆக்காட்டி மிக அன்போடு வளர்த்து வந்தது. திசையெல்லாம் பறந்து பறந்து போய் இரை தேடிக் கொண்டுவந்து கொடுத்தது. இப்படி வளர்க்கிற போது ஒருநாள் அந்த ஆக்காட்டி முதல் குஞ்சுக்கு இரைதேடி மூன்று காத தூரம் போய்விட்டு வந்தது. காதம் என்று சொன்னுல் சுமார் பத்து மைல் தூரம் இருக்கும். அப்படி அது மூன்று காதம் போய்விட்டு வந்தது. பிறகு இரண்டாவது குஞ்சுக்கு இரை தேடிப் புறப்பட்டது. மூன்று குஞ்சுகளிலே இரண்டாவது குஞ்சுதானே நடுக்குஞ்சு? அந்த நடுக்குஞ்சுக்கு இரை தேடி நாலு காதம் போய்விட்டு வந்தது. பிறகு மறுபடியும் புறப்பட்டது. கடைசிக் குஞ்சுக்கு இரை தேடி ரொம்பதூரம், கனதூரம் போய்விட்டு வந்தது.

இப்படி அந்த ஆக்காட்டி போகிறதையும் வருகிறதையும் ஒரு பையன் பார்த்துக்கொண்டே இருந்தான். அவன் அந்தக் கருங்காட்டுப் பாறைக்குப் பக்கத்திலே இருந்த குட்டையிலே துணி துவைக்க வந்தவன். அவன் அந்த ஆக்காட்டியைக் கவனித்துக் கொண்டே இருந்தான். அது கடைசிக் குஞ்சுக்கு இரை தேடிச் சென்ற சமயம் பார்த்து அந்த ஆக்காட்டியின் கூட்டிலே கண்ணி வைத்துவிட்டான். ஆக்காட்டி கூட்டுக்குள்ளே நுழைகிற இடத்திலே அதை வைத்துவிட்டான்.

அந்த ஆக்காட்டி நெடுந்தூரம் சுற்றி இரையெடுத்துக் கொண்டு வேகமாகப் பறந்து வந்தது. கடைசிக் குஞ்சு

பசியினால் வாடுமே என்று அதற்கு அத்தனை அவசரம். அப்படி அவசரமாக வந்ததினாலே கண்ணியிருந்ததைக் கவனிக்கவில்லை. அதனுடைய கால்கள் இரண்டும் கண்ணியிலே மாட்டிக்கொண்டன. இறக்கைகளை அது படபடவென்று அடித்துக்கொண்டு துடித்தது; அழுதது. வலையில் அகப்பட்ட அந்தப் பறவை அழுதுகொண்டே இருக்கவே அதன் கண்ணீர் வெள்ளமாக ஓட ஆரம்பித்துவிட்டது. குதிரையைக் கூட அந்த வெள்ளத்திலே கொண்டுவந்து குளிப்பாட்டினார்களாம். ஆடு மாடுகள் எல்லாம் வந்து வெள்ளமாக ஓடும் கண்ணீரையே தாகத்துக்குக் குடித்தனவாம். எல்லோரும் பார்த்து, 'ஐயோ பாவம்' என்று சொல்லும்படி அந்த ஆக்காட்டி அழுதுகொண்டே இருந்ததாம்.

அந்த ஆக்காட்டியை ஒரு சின்னக் குழந்தை, "ஆக்காட்டியே, நீ எங்கே முட்டை வைத்தாய்?" என்று கேட்டதாம். உடனே அந்த ஆக்காட்டி அந்தக் குழந்தையிடத்திலே தன்னுடைய துன்பக் கதையைச் சொல்லிக்கொண்டே அழுததாம்.

"ஆக்காட்டி ஆக்காட்டி எங்கெங்கே முட்டை
வைத்தாய்?"

"கல்லைத் திறந்து கருங்காட்டுப் பாறையிலே
இட்டது நாலு முட்டை, பொரித்தது மூனுகுஞ்சு,
முதற்குஞ்சுக் கிரைதேடி மூனுகாதம் போய்வந்தேன்;
நடுக்குஞ்சுக் கிரைதேடி நாலு காதம் போய் வந்தேன்;
கடைசிக் குஞ்சுக் கிரைதேடிக் கனதூரம் போய்
வந்தேன்;
வண்ணாரப் பாவி மகன் பார்த்திருந்து கண்ணி
வைத்தான்—
காலிரண்டும் கண்ணியிலே கையிரண்டும் மாரடிக்க .

நான் அழுத கண்ணீரோ நாடெல்லாம் வெள்ளம்போய்
குண்டு குளம் ரொம்பிக் குதிரை குளிப்பாட்டி
ஆடுகளும் மாடுகளும் அங்கு வந்து நீர் குடிக்க
எங்கும் பரந்ததுவே எல்லோரும் பார்த்துருக.''

[குண்டு-குழி. ரொம்பி-நிரம்பி.]

கொங்கு நாட்டுக் கிராமத்திலே மாடு மேய்க்கும் சிறுவர்கள் இந்தப் பாட்டைப் பாடுவார்கள்.

ஆக்காட்டியின் குரலைக் கேட்கும்போதெல்லாம் இந்தப் பாட்டு என் நினைவுக்கு வரும்.

# ஏலேலோ ஐலலோ

பாட்டுக்கு ஒரு அற்புதமான சக்தி இருக்கிறது. அது உள்ளத்தை நெகிழ வைக்கிறது. கரையாத மனத்தையும் கரையச் செய்கிறது. கடவுளே பாட்டில் உருகி விடுவதாகச் சொல்லுகிறார்கள்.

சிரமப்பட்டு வேலை செய்யும் உழைப்பாளி பாடிக் கொண்டே வேலை செய்கிறான். அதனால் அவனுடைய சிரமம் குறைகிறதை அவன் உணர்கிறான்.

படகு தள்ளுகிறவன் பாட்டுப் பாடுகிறான். அவனுக்கும் தனது வேலையிலே இன்பம் பிறக்கிறது. படகிலே செல்லுகின்றவர்களும் அவன் பாட்டிலே லயித்து இன்பமடைகிறார்கள்.

ஓடப் பாட்டு என்று பல பாடல்கள் தமிழிலே இருக்கின்றன. ஏலேலோ ஐலலோ என்றும், ஏலேலோ ஏலலிலோ என்றும் அந்தப் பாட்டுக்களில் அடிக்கடி வரும். கேட்பதற்கு இன்பமாக இருக்கும்.

ரெயில் வண்டி வேகமாகப் போகிறதைப் பார்த்திருக்கிறீர்களா? பக்கத்திலிருந்து கவனித்தால் பூமியே நடுங்குகிறதைப் போலிருக்கும். குப் குப் என்று ரெயில் செய்கின்ற சத்தமும் பயங்கரமாக இருக்கும்.

இந்த ரெயில் வேகத்தையும் சத்தத்தையும் ஓடக்காரன் பாட்டு ஒன்று அழகாகக் கூறுகிறது. வானம் நடுங்குகிறது. மத்தள ஓசை பொங்குகிறது. பூமி நடுங்குகிறது. இப்படி ரெயில் போகிறதாம்.

மானம் நல்ல ஏலேலோ கிடுகிடுங்க—ஐலலோ
கிடுகிடுங்க—ஐலலோ
மத்தளமே ஏலேலோ ஓசையிட—ஐலலோ
ஓசையிட—ஐலலோ
பூமிநல்ல ஏலேலோ கிடுகிடுங்க—ஐலலோ
கிடுகிடுங்க—ஐலலோ
போகுதடா ஏலேலோ ரயிலு வண்டி—ஐலலோ
ரயிலு வண்டி ஐலலோ

[குறிப்பு: இப்பாடலிலே ஐலலோ என்ற பகுதியை மட்டும் ஓடக்காரனோடு சேர்ந்து வேறொருவன் பாடுவான்.]

பாட்டு இத்துடன் முடிந்து விடவில்லை. ஓடக்காரன் மேலும் பாடுகிறான். ஆனால் இப்பொழுது பாட்டின் விஷயம் மாறுகிறது. ஓடக்காரன் கிளியைப் பற்றிப் பாடத் தொடங்குகிறான்.

அன்போடு வளர்த்தால் பிள்ளையைப்போலக் கிளி பழகும். வளர்ப்பவரிடத்திலே தாராளமாக வரும். அவர் தோளின்மீது உட்காரும். அவரோடு அன்போடு பேசவும் செய்யும். ஆனால், அன்பில்லாதவிடத்திலே அது பழகாது. அன்பில்லாமற் கூறும் சொல்லைக்கூட அது புரிந்து

கொள்ளும். அப்படி அன்பில்லாத வார்த்தையைக் கேட்டு ஒரு கிளி பறந்தோடி விட்டதாம். அதை ஏலேலப் பாட்டுக் கூறுகிறது.

ஆலநல்ல ஏலேலோ மரத்துக்கிளி—ஐலலோ
மரத்துக்கிளி—ஐலலோ
ஆளைக் கண்டால் ஏலேலோ பேசுங்கிளி—ஐலலோ
பேசுங்கிளி—ஐலலோ
நான் வளர்க்கும் ஏலேலோ பச்சைக்கிளி—ஐலலோ
பச்சைக்கிளி—ஐலலோ
நாளைவரும் ஏலேலோ கச்சேரிக்கே—ஐலலோ
கச்சேரிக்கே—ஐலலோ
ஆசைக்குத்தான் ஏலேலோ கிளிவளர்த்து—ஐலலோ
கிளிவளர்த்து—ஐலலோ
அக்கரையில் ஏலேலோ மேயவிட்டேன்—ஐலலோ
மேயவிட்டேன்—ஐலலோ
பாவிப்பயல் ஏலேலோ சொன்ன சொல்லு—ஐலலோ
சொன்ன சொல்லு—ஐலலோ
பாவி சொல்லு ஏலேலோ பறந்திடுச்சு—ஐலலோ
பறந்திடுச்சு—ஐலலோ

[ஆல நல்ல மரத்துக்கிளி-ஆல மரத்தில் வளர்ந்த நல்ல கிளி. பறந்திடுச்சு-பறந்து விட்டது.

# மழைப் பாட்டு

பிச்சை எடுக்க வருகின்றவர்களில் எத்தனையோ வகை உண்டு. கூன், குருடு, நொண்டி முதலான உடற் குறைகளைக் காட்டிப் பிச்சை எடுப்பவர்கள் ஒரு வகை. இவர்களைக் கண்டவுடனே, ஐயோ பாவம் என்று இரக்கம் ஏற்படுவது இயல்பு. அதனால் மக்கள் இவர்களுக்குத் தங்களாலான உதவியைச் செய்யப் பரிவோடு முன்வருவார்கள்.

ஆனால், உடம்பிலே குறையில்லாமல் இருக்கிறவர்களிடத்திலே அவ்வளவு பரிவு ஏற்படுவதில்லை. தள்ளாத வயதென்றாலும் அதற்காக இரக்கம் பிறக்கும். நல்ல வாலிபப் பருவத்திலே பிச்சை கேட்க வருகின்றவர்களிடம் பொதுவாக இரக்கம் ஏற்படுவதில்லை. "உமக்கென்ன, ஏதாவது வேலை செய்து பிழைக்கக் கூடாதா?" என்று பலர் கேட்பார்கள்.

இள வயதுக்காரர்களென்றாலும் மழைப் பாட்டுப் பாடிக் கொண்டு வந்தால் உழுது பயிர் செய்யும் விவசாயிகள் நிறைந்த கிராமங்களில் அவர்களுக்குத் தாராளமாகப் பிச்சை கிடைக்கும். மழைப் பாட்டுக்காரர்கள் வந்தால்

விரைவில் மழை பெய்யும் என்பது கிராம மக்களின் நம்பிக்கை.

"மழை சீக்கிரம் வருமா?" என்று எல்லோரும் ஆவலோடு கேட்பார்கள்.

"குறி கேட்டு வந்திருக்கிறேன். மழை நிச்சயம் பெய்யும். குறி சொல்லாவிட்டால் நான் இங்கே மழைப் பாட்டுப் பாடிக்கொண்டு வருவேனு?" என்பான் மழைப் பாட்டுக் காரன்.

குடியானவர்கள் மகிழ்ச்சியோடு அந்தப் பாட்டுக் காரனுக்குப் பலவகையான தானியங்களைப் பிச்சையாகப் போடுவார்கள். அவனுக்கு நல்ல வரும்படி.

வழக்கமாக மழைப் பாட்டுக்காரன் தனியாக வர மாட்டான். கூடத் தன் மனைவியையும் கூட்டி வருவான். இருவருமாகச் சேர்ந்துதான் பாடுவார்கள்.

மழை எப்படிப் பெய்யும் என்பதை அவர்களுடைய பாட்டே அழகாகச் சொல்லும். ஊசி போல மின்னி மின்னி மழை பெய்யுமாம். ஊர் செழிக்கவும், பட்டணம் செழிக் கவும், காடு செழிக்கவும் மழை பெய்யுமாம். இதுவரை பெய்யாத அளவுக்குப் பெரிய மழை பெய்யுமாம்.

பெய்யுமாலம்மா பெய்யுமாலோ
பேயா மழை பெய்யுமாலோ
நல்ல மழை பெய்யுமாலம்மா
நாடு செழிக்கப் பெய்யுமாலோ
ஊசி போல மின்னி மின்னி
ஊர் செழிக்கப் பெய்யுமாலோ
காசு போலே மின்னி மின்னிக்
காடு செழிக்கப் பெய்யுமாலோ

பணத்தைப் போல மின்னி மின்னிப்
　　பட்டணமெல்லாம் பெய்யுமாலோ
பெய்யுமாலம்மா பெய்யுமாலோ
　　பேயா மழை பெய்யுமாலோ
நல்ல மழை பெய்யுமாலம்மா
　　நாடு செழிக்கப் பெய்யுமாலோ
பெய்யுமாலம்மா பெய்யுமாலோ
　　பேயா மழை பெய்யுமாலோ

[பெய்யுமால்-பெய்யும்; ஆல் என்பது அசை பேயா மழை-இதுவரை பெய்யாத அவ்வளவு பெரிய மழை. காசு போலே-பொற்காசு போலே. பணத்தைப் போலே-வெள்ளிப் பணத்தைப் போலே.]

மழை பெய்கின்ற பருவம் பார்த்துத்தான் மழைப் பாட்டுக்காரர்களும் வருவார்கள். ஆதலால் அவர்கள் வாக்குப் பெரும்பாலும் பொய்யாகாது.

உழவனுடைய உள்ளம் எப்பொழுதும் தாராளமானது. பூமி செழிக்க வழி பிறக்கின்றதென்றால் அவன் உள்ளம் பூரித்துப் போவான். பிறகு தானியம் பிச்சை போடுவதில் அவன் தயங்குவானா?

# மழைக் கஞ்சி

மழையின் அவசியத்தை எல்லோரும் உணர்ந்திருக்கிறோம். அது உயிர்களைக் காக்கும் வானமுது. மழை இல்லாவிட்டால் விளைவு இல்லை; அறுவடை இல்லை. உணவு இல்லை. பசிப்பிணியால் வாடி மக்கள் மடிய வேண்டியது தான். மழையே வாழ்விற்குப் பிரதானம் என்பதை நிலத்தை உழுது, தாமும் உண்டு, உலகத்திற்கும் உணவளிக்கும் குடியானவர்களே மிக நன்கு உணர்வார்கள்.

பருவத்தில் மாரி பெய்யாது போனால் நிலம் வரண்டு விடுகிறது. பசும்புல் அற்றுப் போய் விடுகிறது. கால் நடைகள் வாடுகின்றன. மக்கள் வயிறு காய்கின்றது. உழவன் இதைக் கண்டு வருந்துகிறான்; உழத்தி சோர் வடைகின்றாள்.

மழை பெய்யுமா, நாடு செழிக்குமா என்று ஆவலோடு குறி கேட்கிறார்கள். மழைப் பாட்டுப் பாடிக்கொண்டு யாராவது வருகிறார்களா என்று பார்க்கிறார்கள். அவர்கள் ஒருவரையொருவர் சந்திக்கும்போதெல்லாம் மழையைப்

பற்றியே பேசிக் கொள்ளுகிறார்கள். வேற்றூர்களிலிருந்து யாராவது வந்தால் அவரிடம் மழை வளத்தைப் பற்றித் தான் விசாரணை.

சில சமயங்களில் பருவம் கடந்தாவது வானம் பெய்து விடும். சில சமயங்களில் அதுவும் இல்லாமல் போய்விடும். கொங்கு நாட்டில் சில பகுதிகளில் இப்படி ஏற்படுவது சகஜம். குடிக்கக் கஞ்சி இராது. அதோடு தண்ணீரும் சில ஊர்களில் அற்றுப் போய்விடும். கிணறுகளெல்லாம் வறண்டு கிடக்கும்.

இப்படிப் பெரிய நெருக்கடி ஏற்படும் காலத்தில்தான் மழைக் கஞ்சி எடுக்க வேண்டும் என்று ஊர் மக்கள் முடிவு கட்டுகிறார்கள். ஊரிலுள்ள பெண்களெல்லாம் சேர்ந்து கொண்டு ஒவ்வொரு வீடாகச் சென்று பிச்சை எடுப்பார்கள். அரிசி, ராகி, சோளம், கம்பு என்று இப்படி எல்லாத் தானி யங்களும் கிடைக்கும். அவற்றை எல்லாம் ஒன்றாகச் சேர்த்து அரைத்து மாவாக்கி ஊர்ப் பொது இடத்தில் ஒரு பெரிய பானையில் இட்டுக் கஞ்சி காய்ச்சுவார்கள்.

உப்பு இல்லாத கஞ்சி அது. ஆண் பெண் அனைவருக்கும் வழங்கப்படும். எல்லோரும் அதை அங்கேயே குடித்தான வுடன், பெண்கள் தங்கள் குழந்தைகளை எடுத்துக்கொண்டு பரதேசம் போவதாகப் பாவனை செய்து புறப்படுவார்கள்.

இந்தச் சமயத்தில் அவர்கள் மழையில்லாது படும் கஷ்டங்களெல்லாம் ஒரு பாட்டாக வெளிவரும்.

வருண தேவனைக் குறித்து அந்தப் பெண்கள் புலம்பு கிறார்கள். வருணன்தானே மழைக்குக் காரணம்? அதனால் அவனை அடிக்கடி, 'ஐயோ வருணதேவா' என்று கூப்பிட்டுத் தங்கள் முறையீட்டைத் தெரிவிக்கிறார்கள். 'பூமி எந் நாளும் செழித்திருந்து உணவளிக்கும் என்று நம்பி அல்லவா நாங்கள் குழந்தைகளைப் பெற்றெடுத்தோம்? இப்

பொழுது மழையில்லாமையால் பூமி செழிக்கவில்லையே, அதனால் எங்கள் மக்கள் வயிறு வாடுகின்றதே' என்று அவர்கள் நெஞ்சம் குமுறுகிறார்கள்.

பூமியை நம்பியல்லோ—
ஐயோ வருண தேவா
புள்ளைகளைப் பெத்துவிட்டோம்—
ஐயோ வருண தேவா
பூமி செழிக்கவில்லை—
ஐயோ வருண தேவா
புள்ளை வயிறு வாடறதே—
ஐயோ வருண தேவா
மானத்தை நம்பியல்லோ—
ஐயோ வருண தேவா
மக்களையும் பெத்து விட்டோம்—
ஐயோ வருண தேவா
மானஞ் செழிக்கவில்லை—
ஐயோ வருண தேவா
மக்கள் வயிறு வாடறதே—
ஐயோ வருண தேவா

[புள்ளைகள்-பிள்ளைகள்; மானம்-வானம்; மழை. பெத்து-பெற்று.]

உயிர்களை எல்லாம் காப்பாற்றும் உழவன் இன்று முகம் சோர்ந்து நிற்கிறான். உழத்தியர்கள் உணவுக்காக வேலியில் வறண்டு போகாது தப்பி இருக்கும் ஒன்றிரண்டு தழைகளைப் பறித்து விரலெல்லாம் கொப்புளித்துப் போய்விட்டார்கள். வருணதேவனுக்கு இன்னும் கருணை இல்லையா?

மேழி பிடிக்கும் கை முகஞ் சோர்ந்து நிற்கிறதே
கலப்பை பிடிக்கும் கை கை சோர்ந்து நிற்கிறதே
வேலித் தழைபறித்து விரலெல்லாம் கொப்புளமே
காட்டுத் தழைபறித்துக் கையெல்லாம் கொப்புளமே

என்று அங்கலாய்க்கிறார்கள்.

"கையலம்பத் தண்ணீர் இல்லையே, குழந்தை குளிப்பதற்குத் தண்ணீர் இல்லையே, இப்படி எத்தனை நாட்களுக்கு நாங்கள் இங்கு இருந்துகொண்டு பரிதவிப்பது?" என்று மேலும் அவர்கள் கூவுகின்றார்கள்.

கலியாண வாசலிலே கையலம்பத் தண்ணியில்லே
பிள்ளை பெத்த வாசலிலே பிள்ளையலம்பத் தண்ணியில்லே

இதைவிடக் கஷ்டம் வேறு என்ன வேண்டும்? ஆதலினாலே, இவற்றை எல்லாம் தாங்க முடியாமல் நாங்கள் ஊரை விட்டுப் போகிறோம் என்று சொல்லி அழுதுகொண்டு பெண்கள் புறப்படுவார்கள்.

அவர்களுடைய பாட்டிலே உண்மையான சோகம் தொனிக்கிறது. அந்தப் பாட்டை முழுதும் கேளுங்கள்.

பூமியை நம்பியல்லோ—
ஐயோ வருண தேவா
பிள்ளைகளைப் பெத்துவிட்டோம்—
ஐயோ வருண தேவா
பூமி செழிக்கவில்லே—
ஐயோ வருண தேவா
புள்ளே வயிறு வாடறதே—
ஐயோ வருண தேவா

மானத்தை நம்பியல்லோ—
ஐயோ வருண வேதா
மக்களையும் பெத்துவிட்டோம்—
ஐயோ வருண தேவா
மானஞ் செழிக்கவில்லை—
ஐயோ வருண தேவா
மக்கள் வயிறு வாடறதே—
ஐயோ வருண தேவா
மேழி பிடிக்குங் கை—
முகஞ்சோர்ந்து நிற்கிறதே
கலப்பை பிடிக்குங் கை—
கைசோர்ந்து நிற்கிறதே
வேலித் தழை பறித்து—
விரலெல்லாம் கொப்புளமே
காட்டுத் தழை பறித்து—
கையெல்லாம் கொப்புளமே
கலியாண வாசலிலே—
ஐயோ வருண தேவா
கையலம்பத் தண்ணியில்லை—
ஐயோ வருண தேவா
பிள்ளை பெத்த வாசலிலே—
ஐயோ வருண தேவா
பிள்ளையலம்பத் தண்ணியில்லை—
ஐயோ வருண தேவா

இப்படி அவர்கள் பாடிக்கொண்டு புறப்படும் தருணத்தில் அவ்வூரிலுள்ள பெரிய தனவந்தர்கள் அவர்களைத்

தடுத்து, "நீங்கள் ஊரைவிட்டுப் போக வேண்டாம். சீக்கிரம் மழை பெய்து நாடு செழித்துவிடும். பயப்படாதீர்கள். அது வரை வேண்டுமானுல் நாங்கள் சேமித்து வைத்துள்ள தானியங்களை உங்களுக்குக் கொடுக்கிறேம். சேரைப் பிரித்துத் தாராளமாகத் தானியம் வழங்குகிறேம். ஊரைவிட்டுப் போகாதீர்கள்" என்று நல்ல வார்த்தை சொல்லுவது போலப் பின்வரும் பாடலைப் பாடுவார்கள்.

> சேரைப் பிரிச்சுத்தாரேன் சீராட்டுப் போவாதீங்கோ
> குத்தாரி பிரிச்சுமக்குக் கூடைத்தவசம் நான்தர்ரேன்
> சீமை செழித்துவிடும் செல்லமழை பேஞ்சுவிடும்
> நாடு செழித்துவிடும் நல்ல மழை பேஞ்சுவிடும்

இப்படிப் பாடுகின்ற சமயத்திலே பெய்துவிடுமாம். மழைக் கஞ்சி எடுத்தால் நிச்சயம் மழை பெய்தே தீரும் என்று கிராமத்து மக்கள் சொல்லுகிருர்கள். எல்லோரும் பரிந்து கேட்கிறபோது வருண தேவனுக்குத்தான் இரக்கம் உண்டாகாமலா போய்விடும்?

# கொடும்பாவி

செங்கோல் வழுவாமல் நாட்டிலே ஆட்சி நடந்தால் மாதம் மும்மாரி பெய்யும் என்று கூறுவார்கள். ஆட்சி முறையிலே தர்மம் குன்றிவிட்டால் வானம் பொய்த்து விடுமாம். அதேபோல மக்கள் நீதி தவறி நடந்தாலும் மழை சரியாகப் பெய்யாதாம்.

நாட்டுப்புறத்திலே யாராவது ஒருவர் புதிதாக ஓர் ஊருக்கு வந்தால் அவரிடத்திலே முதலில் மழையைப்பற்றித் தான் விசாரிப்பார்கள். "என்னப்பா, உங்கள் ஊரிலே மழைதுளி உண்டா?" என்று கேட்பார்கள்.

"மழையே கிடையாது. இந்த வருஷம் இன்னும் ஒரு சொட்டுத் துளிகூட விழவில்லை. எங்கள் ஊருக்கு மழையே வராது. ஊரிலே எல்லோரும் நீதியாக நடந்தால்தானே மழை வரும்?" என்று பதில் சொல்வதுண்டு.

நியாயம் தவறி நடந்தால் மழை பெய்யாது என்பதில் மக்களுக்கு அத்தனை நம்பிக்கை இருக்கிறது. அதனால்தான் மழை இல்லாத காலத்திலே, "கொடும்பாவி சாகவேணும்;

கொள்ளை மழை பெய்ய வேணும்'' என்று பாடத் தோன்று கிறது அவர்களுக்கு.

மழையை நாடி மழைக் கஞ்சி குடிக்கும் வழக்கத்தை ஒரு நாடோடிப் பாடலிலே பார்த்தோம். மற்ெருரு நாடோடிப் பாடல் மழைக்கு அதிபதியான தேவனைப் பரிந்து வேண்டிக்கொள்வதாக அமைந்திருக்கின்றது. ''வான மகா தேவா, மழையாய்ப் பொழிய வேணும்'' என்று மக்கள் விண்ணப்பம் செய்து கொள்கிருர்கள். வட்டிக்குக் கடன் வாங்கி வயலையும் அடகு வைத்துவிட்டார்கள். வட்டி பெருகிக்கொண்டே இருக்கிறது. கடனைத் தீர்க்க வழி யொன்றும் ஏற்படவில்லை. மழை பொழிந்து பயிர் செழித் தால்தானே கடனைத் தீர்க்க முடியும்? ஆதலால் கோடை மழை பெய்ய வேண்டும் என்றும், மாசி மழை பெய்ய வேண்டும், மரங்கள் தழைய வேண்டும் என்றும் மக்கள் விரும்புகிருர்கள்.

மழை எப்படிப் பெய்ய வேண்டுமாம்? ஊசிபோல மின்னல் மின்ன வேண்டும். உதயக் காலத்திலே கதிரவனின் பொற் கிரணங்கள் மேகங்களை ஊடுருவிக்கொண்டு பாய்ந்து வருகின்ற வகையிலே மழை காலிறங்க வேண்டும். பாசி மின்னல், கொடி மின்னல் எல்லாம் தோன்ற மழை பொழிய வேண்டும். இந்த அழகிய வருணனைகள் ஒரு நாடோடிப் பாடலிலே வருகின்றன. பாட்டைப் பார்ப்போம்.

வானமழை ராசாவே வான மகா தேவா
வான மகா தேவா மழையாய்ப் பொழியவேணும்
சோனைமழை யில்லாமல் சோறுன்னு அழுகுருர்கள்
காசிராஜா பெத்த மக்கள் கஞ்சியின்னு அழுகுருர்கள்
காரைப் பழம் பறிச்சுக் கையிரண்டும் கொப்புளமாம்
சூரிப் பழம் பறிச்சுத் துன்ப மிக வாகுதய்யோ
வட்டிக் கடன் வாங்கி வயலை யடகு வைத்தோம்
வட்டி பெருகுதய்யோ வயல் சாவி யாகுதய்யோ

காலம் தெளிய வேணும் காரிமழை பெய்ய வேணும்
ஊரு தெளியவேணும் உத்த மழை பெய்யவேணும்
கோடை மழை பெய்யவேணும் குடிமக்கள் வாழவேணும்
மாசி மழை பெய்யவேணும் மரங்கள் தழைய வேணும்
கொடும்பாவி சாகவேணும் கொள்ளைமழை
பெய்யவேணும்
மாபாவி சாகவேணும் மாய மழை பெய்யவேணும்
ஊசிபோல மின்னல் மின்னி உதயம்போல் காலிறங்கி
பாசிபோல மின்னல் மின்னிப் பவளம்போல் காலிறங்கி
சந்து சந்தா மின்னல் மின்னி சலமூலே தண்ணீர் வர
கொடி கொடியா மின்னல் மின்னிக்கொடிமூலே
தண்ணீர்வர
வானமழை ராசாவே வான மகாதேவா
வான மகாதேவா மழையாய்ப் பொழியவேணும்

[சோனை மழை - விடாது பெய்யும் மழை. பெத்த - பெற்ற. சாவியாதல் - தானியமணிகள் பிடியாமல் பதராகப் போதல். காரி மழை - கார்மழை. உத்த - உற்ற.]

காரைப் பழத்தையும், சூரிப் பழத்தையும் செழித்த காலத்தில் யாரும் தீண்டமாட்டார்கள். கஞ்சிக்கு வாடுகின்ற காலத்தில் அவற்றையும் பறித்து மக்கள் உண்டு பசியாற்றிக்கொள்ள முயற்சி செய்கிறார்கள். காரைச் செடியிலும் சூரி மரத்திலும் முள் நிறைய இருக்கும். அவற்றிலே பழம் பறிப்பதென்றால் கையெல்லாம் முள் தைக்கும்.

# பொன் கலப்பை

சோனை மழை பெய்துவிடுகிறது. எங்கு பார்த்தாலும் வெள்ளம். எங்கு பார்த்தாலும் செழிப்பின் அறிகுறி.

மரங்கள் தழைக்கின்றன. பசும்புல் தோன்றுகிறது. கழனிகள் புதிய இளமையும் அழகும் கொள்ளுகின்றன.

உழவர்களுக்கு ஒரே மகிழ்ச்சி. மழை பெய்யாத காலத்தில் ஏற்பட்ட சோர்வெல்லாம் பறந்துவிடுகிறது. அவர்கள் உள்ளம் பூரிக்கிறது. உழுது பயிரிட்டு உலகத்தைக் காக்க அவர்கள் உற்சாகத்தோடு எழுகின்றார்கள்.

அவர்களுடைய உற்சாகத்திலே என்னவெல்லாமோ பேசுகிறார்கள். பயிர் செய்வதற்கு முதலில் நிலத்தை உழ வேண்டுமல்லவா? மழை பெய்துவிட்டதால் உழவுக்குப் பக்குவமான நிலையிலே நிலம் இருக்கின்றது.

"பொன்னால் செய்த கலப்பைகளை எடுத்துக்கொண்டு வாருங்கள்" என்று உழவன் தனது உற்சாகத்தில் கூவுகிறான்

கலப்பை மட்டுமா பொன்னுல் செய்யப்பட்டிருக்கிறது? கலப்பையில் நீளமான சட்டம் ஒன்று இணைக்கப்பட்டிருக்கும். அதற்குக் கருவத்தடி என்று பெயர். அதன் ஒரு கோடியில் உழுகின்ற கலப்பையிருக்கும்; மற்ருெரு கோடியில் நுகத்தடியைக் கயிற்ருல் கட்டி அதில் மாடுகளேப் பூட்டுவார்கள். கருவத்தடியும் பொன்னுல் ஆனது; நுகத்தடியும் பொன்னுல் ஆனது; பிரிக் கயிறும் பொன்னுல் திரிக்கப்பட்டது. இவற்றை எல்லாம் எடுத்து வரும்படி உழவன் கூவுகிருன்.

அவனுடைய உற்சாகம் இன்னும் பொங்குகிறது. "பொன்னுலே செய்த கூடைகளே எடுத்து வாருங்கள். பொன்னுன மாடுகளே ஓட்டிக்கொண்டு வாருங்கள்" என்று மேலும் சொல்லுகிருன். மாடுகள் உழவனுக்குப் பொன்னே போன்றவை. அவைதான் அவனுடைய பெரிய உடைமை.

கலப்பை, கூடை, மாடுகள் ஆகிய இவை மட்டும் போதுமா? உழுது சேறு கலக்கிப் பூமியை நலம் செய்து விதைப்பதற்கு நெல் வேண்டாமா? உழவன் நெல்லெடுத்து வர ஆணேயிடுகிருன். அன்னச் சம்பா, அழகு சம்பா, சின்னச் சம்பா, சீரகச் சம்பா, முத்துச் சம்பா, மிளகு சம்பா இப்படிப் பலவகையான நெல் மணிகளே எடுத்து வரவேண்டும் என்பது அவன் ஆணே.

உழவன் யானே கட்டிச் சேறு கலக்குவானும்; குதிரை கட்டிச் சேறு கலக்குவானும். இப்படிச் செய்து நெல் விதைத்து வெள்ளிங்கிரி என்ற மலேப்பகுதியிலிருக்கும் சோலேயிலே விதவிதமான நெல் விளேயச் செய்வானும்.

மழை பெய்துவிட்டால் உழவனுக்கு உண்டாகும் மகிழ்ச்சியைப் பார்த்தீர்களா? இந்த மகிழ்ச்சியை ஒரு பாட்டு அழகாகக் கூறுகின்றது. வயல் வெளியிலே மிதந்து வந்த பாட்டு அது. தேவேந்திரப் பள்ளனே நோக்கிக் கூறியதாகப் பாட்டு வருகிறது:

பொன்னுலே கலப்பைகளை எடுத்துவா தேவேந்திரா
பொன்னுலே கருவத்தடி எடுத்துவா தேவேந்திரா
பொன்னுலே நுகத்தடியும் எடுத்துவா தேவேந்திரா
பொன்னுலே பிரிக்கயிறு எடுத்துவா தேவேந்திரா
பொன்னுலே கூடைகளும் எடுத்துவா தேவேந்திரா
பொன்னுன மாடுகளை ஓட்டிவா தேவேந்திரா
அன்னச்சம்பா அழகுசம்பா எடுத்துவா தேவேந்திரா
சின்னச்சம்பா சீரகச்சம்பா எடுத்துவா தேவேந்திரா
முத்துச்சம்பா மிளகுசம்பா எடுத்துவா தேவேந்திரா
ஆனைகட்டிச் சேறுகலக்கி அன்னச்சம்பா நாத்துமிட்டு
குதிரைகட்டிச் சேறுகலக்கிக் கொத்துச் சம்பா
நாத்துமிட்டு
வெள்ளிங்கிரிச் சோங்கிலே விதவிதமா நெல்விளைப்போம்

[குறிப்பு: வெள்ளிங்கிரி என்பது கோயம்புத்தூருக்குச் சற்று தொலைவில் உள்ள மலை சோங்கு-சோலை.]

இவ்வாறு உற்சாகமாகப் பயிர் செய்து நெல் விளைந்து விடுகிறது.

களத்தில் நெல் குவியல் குவியலாகக் கிடக்கிறது. உழவன் உள்ளம் பூரித்துப் போகிறது.

உழவன் கருணை நிறைந்தவன். அவன் தன் உழைப்பால் உயிர்களுக்குப் பசிப்பிணியைப் போக்குகிறவனல்லவா? அதனுல் நல்ல விளைச்சல் கிடைத்தவுடனே அறம் செய்ய நினைக்கிருன். தங்க வள்ளத்திலே நெல்லெடுத்துத் தாசர்களுக்கு வழங்கும்படி அவன் கூறுகிருன். கோயிற் பூசாரிகள், உடற் குறையுள்ளவர்கள் ஆகிய எல்லோருக்கும் தாராள

மாகக் கொடுக்கிறான். மீதியுள்ள நெல்லைத்தான் அவன் சேமித்து வைக்கிறானும்.

நெல் விளைந்த மகிழ்ச்சியிலே பள்ளிகள் ஆரவாரித்து மங்கல ஒலி செய்வார்கள். அப்படிச் செய்வதற்குக் குலவை யிடுதல் என்று பெயர். தருமம் செய்த பின்னர் மீதியுள்ள நெல்லை மச்சிலும் குச்சிலும் போட்டுவிட்டுக் குலவையிடும் படி பள்ளிகளை உழவன் பணிக்கிறான்.

தங்க வள்ளம் கையிலெடுத்துத் தாசருக்குப் பிச்சையிடு
பொன்னு வள்ளம் கையிலெடுத்துப் பூசாரிக்குப்
பிச்சையிடு

முச்சியிலே நெல்லெடுத்து முடவனுக்குப் பிச்சையிடு
மச்சிலேயும் குச்சிலேயும் மிச்சநெல்லைக் கொட்டிவை
போடுங்கடி பெண்டுகளே பொன்னுலே ஒரு குலவை
எடுங்களடி பெண்டுகளே எல்லாரும் ஒரு குலவை
தேவேந்திரப் பெண்டுகளே சேர்ந்து குலவை
யெடுங்களே

சேர்ந்து குலவை யெடுங்களே தேவேந்திரப்
பெண்டுகளே

[முச்சி-சிறிய முறம். தேவேந்திரப் பள்ளிகளைக் குலவை யிடும்படி உழவன் கூறுகிறான்.]

# கேலிப் பாட்டு

சோம்பலை யாரும் பாராட்டமாட்டார்கள். சோம்பித் திரிகின்றவர் வாழ்க்கையிலே வெற்றி பெற முடியாது. அதனால்தான் பாரதியார் தமது பாப்பாப் பாட்டிலே, சோம்பல் மிகக் கெடுதி பாப்பா' என்று பாடி இருக்கிறார்.

நாட்டுப்புறத்தில் உள்ள மக்களில் பெரும்பாலோர் உடல் உழைப்பினாலே வாழ்க்கை நடத்துகின்றவர்கள். அவர்கள் சோம்பேறிகளாக இருக்க முடியாது.

ஆனால், அங்கேயும் சில சோம்பேறிகள் இருப்பார்கள். அவர்களை யாரும் மதிப்பதில்லை. அவர்கள் எல்லோருடைய இகழ்ச்சிக்கும் கேலிக்கும் ஆளாவார்கள். அப்படிப்பட்ட சோம்பேறி ஒருவனைக் கேலி செய்வதுபோல ஒரு பாட்டுண்டு. அந்தச் சோம்பேறி மண்வெட்டி வேலை செய்யா விட்டாலும், ஆடுகளையாவது மேய்க்கக்கூடாதா? அதையும் செய்யமாட்டானாம். வெய்யிலே அவன் மேல் படக்கூடாது. அதே சமயத்தில் சோளச் சோறு அவன் தொண்டையில் இறங்காது. கேழ்வரகிலே களி செய்து போட்டால்

கிளிபோலத் தின்பானும். கூட்டில் அடைத்து வைத்துள்ள கிளி ஒரு வேலையும் செய்யாமல் சாப்பிடுகிறதல்லவா? கிளியாவது சொன்ன சொல்லைத் திருப்பிச் சொல்லுகிறது. இவன் யார் சொல்லையும் கேட்க மாட்டான். இவனைப் பற்றிய பாட்டைப் பார்க்கலாம்.

வெள்ளாடு மேய்க்க மாட்டான்
வெய்யிலிலே அலைய மாட்டான்
சோளச் சோறு தின்ன மாட்டான்
சொன்ன சொல்லைக் கேட்க மாட்டான்
களிக்கிண்டிப் போட்ட வுடன்
கிளி போலத் தின்பான் ஐயா!

இது வேலை செய்யாத சோம்பேறியாகத் திரியும் ஆண் மகனைக் கேலி செய்யும் பாட்டு. பெண்களைக் கேலி செய்கின்ற பாட்டும் உண்டு.

பெண்கள் தங்களுடைய அழகிலே பெருமையடைவார்கள். அவர்களைக் கேலி செய்வதானால் அவர்களுடைய அழகைப்பற்றி ஏதாவது சொன்னால் போதும், அதைவிட வேறு கேலி வேண்டாம்.

சின்னப்பன் என்கிற ஒருவன் ஒரு தூரி கட்டினானாம். காட்டிலே நடந்த செய்தி இது. இரண்டு மரக்கிளைகளின் உதவியைக் கொண்டு அவன் தூரி அமைக்கிறான். ஊணான் கொடி என்று ஒரு வகைக் கொடி உண்டு. அது நீளமாகப் படர்ந்திருக்கும். அது உறுதி வாய்ந்தது. எளிதில் அறுந்து போகாதது. அக்கொடியைக் கொண்டு காட்டிலே தூரி கட்டி ஆடுவார்கள். சின்னப்பன் அப்படி ஒரு தூரி கட்டுகிறான்.

அவன் எப்படிப் பட்டவன்? கோணலான காலை உடையவன். அவன் போட்ட தூரியிலே ஒரு மங்கை

ஆடுகிருள். அவள் எப்படி இருக்கிருள்? பாட்டிலேயே அவளைப்பற்றித் தெரிந்துகொள்ளலாம்.

அந்த மரத்துக்கும் இந்த மரத்துக்கும்
விட்டம் போட்டு
அழகான மாமரத்திலே தூரி போட்டு
கோணைக் காலுச் சின்னப்பன் போட்ட தூரி
குரங்கு மூஞ்சி நஞ்சக்காள் ஆடுந் தூரி !

கடவுளிடத்திலே பக்தி வேண்டும். அந்தப் பக்தியினுலே மனிதன் உயர்வடைகிருன். பக்தியின் பெருமை கொஞ்சமல்ல. நம் நாட்டிலே எத்தனையோ மகான்கள் தோன்றியிருக்கிருர்கள். பக்தியால் அடையக்கூடிய பெருமையை அவர்கள் நமக்குக் காட்டியிருக்கிருர்கள். அவர்களுடைய உபதேசங்களைப் பின்பற்றி நாம் இறைவனிடத்திலே பக்தி செலுத்திஞல் உயர்ந்த வாழ்வு பெற முடியும்.

பக்தி என்பது உள்ளத்திலிருந்து தோன்ற வேண்டும்; வெளி வேஷமாக மட்டும் இருக்கக்கூடாது. பார்ப்பதற்குச் சிறந்த பக்தியுடையவன் போல இருப்பதில் பயனில்லை. உண்மையான பக்தியினுல்தான் பெருமை ஏற்படும்.

ஒருவன் திருப்பதிக்குப் போகிருன்; தலையை மொட்டையடித்துக் கொள்கிருன். ஆனுல், அவன் மனம் தூய்மையடையவில்லை. அதில் கெட்ட எண்ணங்கள் நிறைந்திருக்கின்றன. அவற்றைப் போக்காமல் தலையை மட்டும் மொட்டை யடித்துக் கொண்டதால் என்ன பயன்?

திருப்பதியிலிருந்து அவன் வருகிருன். வழியிலே ஒரு கொல்லையைப் பார்க்கிருன். அதிலே கம்பு நன்ருக விளைந்திருக்கிறது. அவனுக்குக் கம்பங் கதிரிலே ஆசை விழுந்து விடுகிறது. இரண்டு கதிர் ஒடித்துக்கொள்கிருன். அந்தச்

சமயத்திலே கொல்லைக்காரன் பார்த்துவிடுகிறான். பிறகு அவன் சும்மா இருப்பானா?

இந்தத் திருப்பதி மொட்டையைக் கேலி செய்து ஒரு பாடல் உண்டு. சிறுவர்கள் ஆடிக்கொண்டே இப்பாடலைப் பாடுவார்கள்.

திருப்பதிக்குப் போய் வந்தேன் நாராயணா
திருமொட்டை அடித்து வந்தேன் நாராயணா
அங்கே ஒரு கம்பங் கொல்லை நாராயணா
அதிலே ரண்டு கதிர் ஒடிச்சேன் நாராயணா
கொல்லைக்காரன் பார்த்து விட்டான் நாராயணா
கோலெடுத்து ஓடி வந்தான் நாராயணா!

பெண்கள் கூட்டமாகக் கூடிக் கும்மியடித்து விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். சாதாரணமாகக் கும்மியடிப்பதை எல்லோரும் பார்த்து மகிழ்வார்கள். அவர்களுடைய மகிழ்ச்சியிலே கும்மியடிக்கிற பெண்களுக்கு உற்சாகம் இன்னும் அதிகமாகக் கிளம்பும்.

இது வழக்கமாக நடக்கிற நிகழ்ச்சி. ஆனால், அன்று அவர்கள் கும்மியடிக்கிறபோது அத்தை மகனொருவன் அங்கு வந்து சேருகிறான். அவனைக் கேலி செய்யவேண்டுமென்று பாட்டை முதலில் தொடங்கும் பெண்ணுக்குத் தோன்றியது.

முதலில் கும்மிப் பாட்டு ஒழுங்காகத்தான் ஆரம்பிக்கிறது. அண்ணன்மாருடைய பெருமையை அது கூறுகிறது.

பெரிய கிணத்திலே பாம்படிச்சுப்
பேருரு வீதியில் வேட்டையாடி
வேட்டை யாடித்தானே வீட்டுக்கு வந்தார்கள்
அண்ணன்மார் வந்தார்கள் தண்ணீர்கொடு.

சின்னக் கிணத்திலே பாம்படிச்சுச்
சிங்காரத் தோப்பிலே வேட்டையாடி
வேட்டை யாடித்தானே வீட்டுக்கு வந்தார்கள்
அண்ணன்மார் வந்தார்கள் தண்ணீர்கொடு.

அதற்கு மேலே விஷமம் தொடங்குகிறது. அத்தை மகனைக் கிண்டல் செய்கிறாள் கும்மிப் பாட்டிலே.

நெல்லு விளஞ்சதைப் பாருங்கடி
நெல்லுச் சாய்ந்ததைப் பாருங்கடி
நேத்துப் பிறந்த அத்தை மகனுக்கு
மீசை முளைச்சதைப் பாருங்கடி
ஆத்திலே தண்ணிதான் ஓடாதா
ஆராக் குஞ்சுதான் மேயாதா
நேத்துப் பிறந்த அத்தை மகனுக்கு
மீசை முளைச்சதைப் பாருங்கடி

[விளஞ்சதை-விளைந்ததை. நேத்து-நேற்று முளைச்சதை-முளைத்ததை. ஆத்திலே-ஆற்றிலே. தண்ணிதான்-தண்ணீர்தான். ஆராக்குஞ்சு-ஆரா என்னும் ஒரு வகை மீனின் குஞ்சு.]

இதைக் கேட்டதும் அத்தை மகனுக்கு ரோசம் வந்துவிட்டது. அவனும் பதிலுக்குப் பாட ஆரம்பிக்கிறானும். அதுவும் கும்மிப் பாட்டுத்தான்.

கும்மி யடிக்கிற பெண்டுகளா ஒரு
கோளாறு சொல்லுறேன் கேளுங்கடி
அம்மியைத் தூக்கி மடியில் கட்டி
ஆழக் கிணற்றில் இறங்குங்கடி

[கோளாறு-சூழ்ச்சி. கிணத்தில்-கிணற்றில்.]

யாருமே வராத இடமாக வேண்டுமென்ருல் அத்தை மகன் சொல்கிற யோசனை சரியானதுதான்! அம்மியை மடியில் கட்டிக்கொண்டு ஆழக்கிணற்றில் இறங்கிஞல் என்ன ஆகும்? நீங்களே யோசனை செய்து கொள்ளுங்கள். ஆனுல், அந்தப் பெண்கள் அத்தை மகனுடைய யோசனையைக் கேட்க வில்லை. அவனையே மடக்கி மேலும் பாடுகிருர்கள். அத்தை மகனுக்கு அவர்கள் சளைத்தவர்கள் அல்ல.

கும்மி யடிக்கிற பக்கத்திலே
கூட்டமென்னடி ஆண் பிள்ளைக்கு ?
பல்லுக் காரப் பையன் பல்லைப் பிடுங்கிக்
குப்புறத் தள்ளடி ஆண் பிள்ளையை
கும்மியடிக்கிற பக்கத்திலே
கூட்டமென்னடி ஆண் பிள்ளைக்கு
கம்பத்து மூளியின் பல்லைப் பிடுங்கிக்
குப்புறத்தள்ளடி ஆண் பிள்ளையை

# எங்கள் முத்துமாரி

நாடோடிப் பாடல் எளிமையான சொற்களாலும், பேச்சு வழக்குச் சொற்களாலும் ஆனது. அதன் நடை எளிமையாக இருப்பது போலவே அதன் இசையும் எளிமை யாகவே இருக்கும். அதைப் பாடும் மக்களின் உள்ளத்தைப் போலவே அது எளிமையானது.

எளிமையானது என்பதால் அது உள்ளத்தைக் கவராது என்று நினைக்கக்கூடாது. எளிமைக்கே ஒரு தனிக் கவர்ச்சி உண்டு. அதனுல்தான் ரவீந்திரநாத தாகூர் போன்ற கவி ஞர்கள் நாடோடிப் பாடல்களின் இசையமைப்பைத் தங்க ளுடைய பாடல்கள் சிலவற்றில் கையாண்டிருக்கிறார்கள்.

தமிழ்க் கவிஞர்களும் இவ்வாறு கையாண்டதுண்டு. ஆநந்தக்களிப்புப் போன்ற பண்டாரப் பாட்டின் மெட்டிலே உயர்ந்த ஞானப் பாடலைத் தாயுமானவர் பாடி யிருக்கிறார். சித்தர்களுடைய பாடல்கள் பல எளிய இசை யமைப்பையே கொண்டிருக்கின்றன.

தாந்திமித்திமித் தந்தக் கோனாரே
தீந்திமித்திமித் திந்தக் கோனாரே

என்று தொடங்கும் சித்தர் பாடல் நாடோடி இனத்தைச் சேர்ந்ததாகவே தோன்றும். ஆனால், அதில் பொதிந்திருக்கும் கருத்துக்கள் பலவிடங்களில் நமது அறிவுக்கும் எட்டாத உயர்ந்த தத்துவ உண்மையாக இருக்கும்.

இராமலிங்க சுவாமிகளின் பாடலிலே நாடோடி இசையிலமைந்தவைகளும் உண்டு.

வானத்தின்மீது மயிலாடக் கண்டேன்
மயில் குயிலாச்சுதடி—அக்கச்சி
மயில் குயிலாச்சுதடி

என்ற அவருடைய பாடல் நமக்கெல்லாம் தெரியும்.

நமது தேசியக் கவி பாரதியார் நாடோடிப் பாடல்களின் இசையமைப்பிலே பல பாடல்கள் பாடியுள்ளார். 'கண்ணன் மன நிலையைத் தங்கமே தங்கம்' என்று வரும் தங்கப் பாட்டு ஒரு நல்ல உதாரணம். நொண்டிச் சிந்து பாரதியாருடைய கையில் புதிய ஜீவன் பெறுகிறது.

"உலகத்து நாயகியே எங்கள் முத்துமாரியம்மா" என்ற பாரதியாரின் முத்துமாரி பாட்டு பலருக்கும் தெரிந்திருக்கும். அந்தப் பாட்டுக்கு இசையமைப்பைப் பாரதியார் ஒரு நாடோடிப் பாடலிலிருந்து எடுத்திருக்கிறார். அந்தப் பாடலும் முத்துமாரியின் மேல் எழுந்ததுதான்.

ஆதியிலே அமைந்தசக்தி—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி
ஆளுருளாம் பூமி யெல்லாம்—சிங்கத்து
மேலேறி யவள், சிங்கத்து மேலேறி
கன்னபுரம் வந்திருப்பாள்—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி

காடு மலே வந்திருப்பாள்—சிங்கத்து
மேலேறியவள், சிங்கத்து மேலேறி
என்ன சொல்வோம் உன்மகிமை—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி
எங்களே நீ காக்கவேணும்—சிங்கத்து
மேலேறி அம்மா, சிங்கத்து மேலேறி
தஞ்ச மென்று வந்தடைந்தோம்—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி
தயவு வச்சுக் காக்கவேணும்—சிங்கத்து
மேலேறி யம்மா, சிங்கத்து மேலேறி
பார்க்காமலே நீயிருந்தால்—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி
பஞ்சமெல்லாம் தீர்ந்திடுமோ—சிங்கத்து
மேலேறி யம்மா, சிங்கத்து மேலேறி
மாவிளக்குக் கொண்டு வந்தோம்—எங்கள் முத்து
மாரியம்மா, எங்கள் முத்து மாரி
மனசு வச்சுக் காக்கவேணும்—சிங்கத்து
மேலேறி யம்மா, சிங்கத்து மேலேறி.

## பிஸ்ஸாம் பறத்தல்

குழந்தைகளுடைய விளையாட்டுக்குக் கணக்கே இல்லை. பள்ளிக்கூடத்திலே கற்றுக்கொள்ளும் விளையாட்டுக்கள் பல. இவையல்லாமல் குழந்தைகள் தலைமுறை தலைமுறையாக விளையாடி வரும் விளையாட்டுக்கள் எத்தனையோ.

விளையாட்டு என்பது குழந்தையின் பிறப்புரிமை என்று கூறலாம். பூனைக் குட்டிகளைப் பார்த்திருப்பீர்கள். நாய்க் குட்டிகளைப் பார்த்திருப்பீர்கள். அவைகள் விளையாடுவதைப் பார்ப்பதே ஒரு தனி இன்பம். அவை விளையாட்டின் மூலமாகவே வாழ்க்கைக்கு அவசியமான பயிற்சிகளைப் பெறுகின்றன. மனிதக் குழந்தைகளும் அப்படித்தான். விளையாட்டின் மூலம் அவைகளுக்குக் கிடைக்கும் அனுபவம் பெரிதும் பயன்படுகிறது. உடல் வளர்ச்சிக்கும், மன வளர்ச்சிக்கும் விளையாட்டு உதவுகின்றது. மற்றவர்களோடு சேர்ந்து பழகுவதிலும் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்று குழந்தை விளையாட்டின் மூலம் கற்றுக்கொள்கிறது. தனது இன்பம் ஒன்றை மட்டுமே எப்பொழுதும் எண்ணிக் கொண்டிருக்கக்கூடாது என்றும் குழந்தை அறிந்து

கொள்கிறது. கூட விளையாடும் மற்றக் குழந்தைகளின் இன்பத்தையும், வசதியையும் கவனிக்க வேண்டும் என்று தெரிந்து கொள்வது முக்கியமான படிப்பினை.

பட்டணங்களிலே குழந்தைகளின் விளையாட்டு ஒரு வகையாக இருக்கும். கிராமங்களிலே வேறுவகையான விளையாட்டுக்களைப் பார்க்கலாம். பட்டணத்துக்கும் கிராமத்துக்கும் பொதுவான விளையாட்டுக்களும் உண்டு.

பிஸ்ஸாம் பறத்தல் என்ற ஒரு விளையாட்டு உங்களுக்குத் தெரியுமா? இரண்டு பெண்குழந்தைகள் எதிர் எதிராக நின்று ஒருத்தியின் வலக்கையை மற்றொருத்தி இடக்கையாலும், இடக்கையை வலக்கையாலும் மாற்றி மாற்றிப் பிடித்துக் கொள்வார்கள். கால்களை ஒன்முகச் சேர்த்து வைத்துக்கொண்டு பாட்டுப் பாடிக்கொண்டே வேகமாகச் சுழன்று சுழன்று வருவார்கள். பிஸ்ஸாலே பிஸ், பிஸ்ஸாலே பிஸ் என்று பாட்டின் முடிவிலே பலதடவை வரும். அப்பொழுது சுழலும் வேகமும் அதிகரிக்கும். இப்படிப் பிஸ்ஸாலே பிஸ் என்று கூறுவதைக் கொண்டே அந்த விளையாட்டுக்குப் பிஸ்ஸாம் பறத்தல் என்ற பெயர் வந்திருக்க வேண்டும்.

இந்த விளையாட்டின்போது கிராமத்திலே பாடும் ஒரு பாட்டை இப்போது பார்க்கலாம்.

சுக்குச் சுக்கு
வெங்கக் கல்லு
பொடி நுணுக்கி
சுகமான பட்டுடுத்து
முகம் மினுக்கி
தாயும் தகப்பனும் கையேந்தித்
தாமரைக் குளத்திலே நீராட

வெள்ளி மலையிலே தீயெரிய
வெண்கலப் பாத்திரம் பொங்கிவர
சூட்டடுப்பிலே கத்தரிக்காய்
சுப்பையன் பெண்டாட்டி ராமக்காள்
கொட்டுங்கோ முழக்குங்கோ
கோணைக் கொம்பை ஊதுங்கோ

பிஸ்ஸாலே பிஸ்
பிஸ்ஸாலே பிஸ்

பிஸ்ஸாம் பறத்தல் உடலுக்கு நல்ல பயிற்சியைக் கொடுக்கும் விளையாட்டு. தும்பி பறத்தலும் இதுபோன்றது தான்.

களைத்துப் போன சமயத்திலே குழந்தைகள் வட்டமாக உட்கார்ந்துகொண்டு பலவகையான பாட்டுக்களைப் பாடுவார்கள். நிலா வெளிச்சம் இருக்கும்போது அவர்களுக்கு உற்சாகம் அதிகம். பெரிய வீட்டு வாசலிலே கூடிவிடுவார்கள். வயது முதிர்ந்தவர்களெல்லோரும் பார்த்தும் கேட்டும் மகிழ்ந்திருக்க இவர்களுடைய ஆட்டமும் பாட்டமும் இரவிலே நெடுநேரம் நடைபெறும்.

குழந்தைகள் சேர்ந்து உட்கார்ந்து பாடும் பாடல்களில் ஒன்று.

காக்கையின் குஞ்சுக்குக் கலியாணம். அதைப்பற்றிக் குழந்தைகள் பாடுகிறார்கள்.

காக்காக் குஞ்சுக்குக் கலியாணமாம்
காசுக் கரைப்படி மஞ்சளாம்
துட்டுக் கொடுத்தால் பூசலாம்
துரையைக் கண்டால் டேக்காம்

கொட்டிப் போட்டால் சிவக்குமாம்
கோயிலுக்குப் போனால் மணக்குமாம்
எல்லாப் பெண்களும் வாருங்கோ
அரமனைத் திண்ணையில் சேருங்கோ
பாட்டிருந்தால் பாடுங்கோ
பணமிருந்தால் போடுங்கோ

இது காக்கைக் குஞ்சைப்பற்றிய நாடோடிப் பாடல். கரிக்குருவியைப் பற்றிப் பாடுகிற மற்றொரு பாடல் உண்டு. அந்தக் குருவியோடு பேசுகிறமாதிரி பாட்டு.

கரிக்குருவி கரிக்குருவி எங்கெங்கே போனாய்?
காராள தேசத்துக்குக் கடவடைக்கப் போனேன்.
என்ன நெல்லுக் கொண்டு வந்தாய்
எனக்குச் சொல்ல வேணும்.
சம்பா நெல்லுக் கொண்டு வந்தேன்
சாதம் நல்லா வேகும்
சம்பா நெல்லுப் போட்டு வைக்கக்
கும்பக் குடம் வேணும்
கும்பக் குடத்துக்குக் காவலிருக்கக்
குழந்தைப் பையன் வேணும்
குழந்தைப் பையனுக்குப் பால் கறக்க
வறட்டெருமை வேணும்
வறட்டெருமைக்குப் பில்லுப் போடப்
பள்ளப் பையன் வேணும்
பள்ளப் பையனுக்குப் படியளக்க
ராஜா வள்ளம் வேணும்
ராஜா வள்ளம் தூக்கியுளக்கப் பூனைக்குட்டி வேணும்

குழந்தைக்குப் பால் வேண்டுமல்லவா? அதற்கு வறட்டெருமை வேண்டுமாம்!

ராஜா முத்திரை போட்ட வள்ளத்திலே எருமை மேய்க்கிற பையனுக்குப் படியளக்கப் போகிறார்களாம். ஆனால், அந்த ராஜா வள்ளத்தைத் தூக்கி அளப்பதற்கு ஒரு பூனைக் குட்டி வேண்டுமாம்!

# மாப்பிள்ளைக் குலவை

புதுமாப்பிள்ளையைப் பார்ப்பதிலே எல்லோருக்கும் மகிழ்ச்சிதானே? அவரைக் கேலி செய்வதிலே குழந்தைகளுக்கு ஒரு தனி இன்பம். ஊழியர்களுக்கு வேறொரு வகையிலே இன்பம் பிறக்கிறது. மாப்பிள்ளையிடமிருந்து நல்ல இனும் எதிர்பார்க்கலாமல்லவா?

கிராமத்திலே பெரிய பண்ணைக்காரர் மகனுக்குத் திருமணம் நடைபெறுகின்றது. எல்லோருக்கும் ஒரே உற்சாகம். பண்ணையிலே வேலை செய்யும் பள்ளிகளுக்கு ஒரு தனிப்பட்ட சந்தோஷம். கலியாண வீட்டிலே நல்ல விருந்து. அதற்கு மேலே மாப்பிள்ளையிடமிருந்து பணம் கிடைக்கப் போகிறது. ஆகையால் அவர்கள் சிரித்த முகத்தோடு வரிசையாக நிற்கிறார்கள்.

மாப்பிள்ளை குதிரை மேலே பவனி வருகிறார். பள்ளிகள் குதிரையின் முன்னால் நின்றுகொண்டு குலவைப் பாட்டுப் பாடுகிறார்கள். அது மாப்பிள்ளையை வாழ்த்துகின்ற பாடலுமாகும்.

முதல் பாட்டிலே பிள்ளையாரைக் குறித்துப் பாடவேண்டு மல்லவா? பிள்ளையார் தானே விக்கினங்களையெல்லாம் நீக்குபவர்? அவரைக் குறிப்பாக முன்னால் நிறுத்திப் பள்ளிகள் கலியாணப் பெண்ணுக்கு மாப்பிள்ளை கணையாழி கொண்டு வருவதைப் பற்றிப் பேசுகிறார்கள்.

குடுகுடு மாங்காயை மடியிலே கட்டிக்
குண்டுமணிப் பிள்ளையாரை முன்னால் நிறுத்தி
ஓடுகிற தண்ணீரில் நீந்தி வருவாரா?
உடம்பெல்லாம் சந்தனம் பூசி வருவாரா?
அங்கோர் ஊருக்குப் போயும் வருவாரா?
அடையாளக் கணையாழி வாங்கி வருவாரா?
—என்தோழி பெண்டுகளே எடுங்கடி குலவைகளே

பிறகு நகைச் சுவையோடு கூடிய ஒரு பாடல் வருகிறது. மாப்பிள்ளை ஒரு பெரிய யானையாம்; யாருடைய கட்டுக்கும் அவர் அடங்கமாட்டாராம். யானையை எவ்வளவு பெரிய மரத்தில் கட்டினாலும் நிற்காமல் மரத்தைத் தள்ளிக் கொண்டுபோய் விடுமாம். அப்படிப்பட்ட யானையைப் போன்ற மாப்பிள்ளை அவருடைய பண்ணையிலே வேலை செய்யும் பள்ளிகள் ஏதாவது கூறினால் அதை மீறி நடக்க மாட்டாராம். பண்ணையில் வேலை செய்கிறவர்களிடத்தில் அவருக்கு அத்தனை மரியாதை இருக்கிறது என்று பள்ளிகள் தங்கள் குலவைப் பாட்டில் கூறுகிறார்கள்.

ஆனையென்றால் ஆனை அறுபதடி ஆனை
ஆலமரத்தில் கட்டினால் நிற்காதாம் அந்த யானை
அரசமரத்தில் கட்டினால் நிற்காதாம் அந்த யானை
புங்கமரத்தில் கட்டினால் நிற்காதாம் அந்த யானை
புளிய மரத்தில் கட்டினால் நிற்காதாம் அந்த யானை

பள்ளி விரலைக் காட்டினுல் நிற்குமாம் அந்தயானை
—என்தோழி பெண்டுகளே எடுங்கடி குலவைகளே

திருமண வைபவத்திலே மற்றும் ஓர் காட்சி. பல்லக்கு கள் வருகின்றன. மேலே சிவிகைகள் நிழல் செய்கின்றன. நாட்டிய மாடுகிறுர்கள். நாகசுர ஒலி இன்பமாக எழு கின்றது. கோலாகலத்தோடு சிரித்த முகங்காட்டி மாப்பிள்ளை தம் அத்தை மகளான புது மணப் பெண் ணுடனே வருகிறுர். இந்தக் காட்சியைப் பள்ளிகள் மற்ருெரு பாட்டிலே வருணித்துக் குலவை பாடுகிறுர்கள்:

பல்லக்காம் பல்லக்காம் பொன்பதைத்த பல்லக்காம்
ஆலத்தி ஒருபுறமாம் அங்கே பல சிவிகைகளாம்
நாட்டியங்கள் ஆடிவர நாகசுரம் ஊதிவர
தேவேந்திரப் பள்ளிகளும் தேன்போலப் பாடிவர
அத்தை மகளுடனே சிரித்து முகம் கொடுத்து
நம்ம ஊர்ப் பண்ணையார் சீமையாள வாரார்கள்
—என்தோழி பெண்டுகளே எடுங்கடி குலவைகளே

இவ்வளவு சிறப்பெல்லாம் கூறிக் குலவை பாடுகின்ற பெண்களுக்கு நல்ல பரிசுகள் கிடைக்காமலா போகும்?

# தாலாட்டு

குழந்தையோடு கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவதென்றால் தாய்க்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகிறது. தாய் சொல்லுகின்ற அத்தனை வார்த்தைகளையும் பச்சைக் குழந்தை தெரிந்துகொள்ளுகிறதோ என்னவோ நமக்குத் தெரியாது. ஆனால், தாயின் அன்புப் பேச்சிலே குழந்தை இன்பங் காண்கிறது என்பது நிச்சயம்.

சிலவேளைகளிலே குழந்தையை மடியில் போட்டுக் கொண்டு அதற்குத் தாய் பாட்டுச் சொல்லுவாள். குழந்தைக்கும் தாய்க்குமே புரிகின்ற மழலைப் பாட்டுத்தான் அது.

தாய் காலை நீட்டித் தரையிலே உட்கார்ந்திருக்கிறாள். நீட்டிய கால்களின் மேல் குழந்தை படுத்திருக்கிறது. அதற்கு இப்பொழுதுதான் ஏதேதோ குழறிக் குழறி ஒலியெழுப்பும் வல்லமை தோன்றியிருக்கிறது. இன்னும் வார்த்தைகள் சொல்லவராது. குழந்தை அவ்வாறு ஒலியெழுப்பி அதிலேயும் இன்பமடைகிறது. ஊ...ஊ என்றும், ஊங்கு...ஊங்கு என்றும் குழந்தை பேசுகிறது. இடையிடையே நாக்கை

வெளியே நீட்டுகிறது. கைகால்களை வேகமாக ஆட்டுகிறது. தாய் குழந்தையோடு பேசுகிறாள். மகிழ்ச்சி ததும்பும் அவளுடைய வதனத்தைப் பார்த்துக் குழந்தை சிரிக்கிறது.

ஊங்கு என்றால் குழந்தைக்கும் தாய்க்கும் தெரிகின்ற தனி மொழியில் பால் என்று பொருள். குழந்தை ஊங்கு என்று சொல்லுகிறது. தாய் அதையே வைத்து ஒரு பாட்டுப் பாடுகிறாள்.

ஊங்கு குடிக்கிறயா?
ஊறுகாய் தின்கிறயா?
பாலுக் குடிக்கிறயா?
பழஞ்சோறு தின்கிறயா?
அக்கக்கா ஊர்க்குருவி
ஆலாம் பழம்போடு
தின்னப் பழம்போடு
திருமுடிக்கோர் பூப்போடு

இப்படித் தாய் நீட்டி நீட்டிப் பாடுகிறாள். குழந்தை கைகளையும் கால்களையும் ஆட்டிக்கொண்டு உடம்பை நெளித்து நெளித்து ஆ...ஊ என்று பேசுகிறது. நாக்கை வெளியே நீட்டுகிறது.

நாக்கை நாக்கை நீட்டுதாம்
நல்ல பாம்புக் குட்டியாம்
ஊங்கு குடிக்கிறயா?
ஊறுகாய் தின்கிறயா?

என்று மேலும் பாடுகிறாள் தாய்.

இப்படிக் குழந்தையோடு கொஞ்சிக் கொண்டிருக்கிற தாய் பாட்டை நிறுத்துகிருள். குழந்தை உறங்க வேண்டிய நேரம் வருகிறது.

தொட்டிலில் குழந்தையை அன்போடு வைத்துத் தாலாட்டுகிருள். மறுபடியும் பாட்டுத் தொடங்குகிறது.

தாலாட்டும்போது பாடுகின்ற பாட்டுக்கள்தாம் எத்தனை எத்தனை! அவைகளிலே உள்ள கற்பனைகளும் எத்தனை! உறக்க மயக்கத்திலே அழத் தொடங்கிய குழந்தையும் தாலாட்டுப் பாடலைக் கேட்டு அழுகையை நிறுத்துகிறது; உள்ளம் மகிழ்கிறது. அப்படியே உறக்கத்தில் ஆழ்ந்து விடுகிறது.

*ஆராரோ ஆராரோ ஆராரடித்தாரோ*
*ஆரடித்து நீயழுதாய் அஞ்சனக் கண் மைகரைய*
*கண்ணுன கண்ணேஎன் கண்குழிந்த மாம்பழமே*
*தின்னுப் பழமேஎன் தெவிட்டாத செந்தேனே*
*ஈச்சம் பழமேஎன் இனித்திருக்கும் தீங்கனியே*
*வாழைக் கனியேஎன் வரிக்கண் பலாச்சுளையே*
*கண்ணுன கண்ணுற்குக் கண்ணூறு வாராமல்*
*சுண்ணும்பு மஞ்சளுமாய் சுற்றியெறி கண்ணுற்கு*
*கண்ணை அடித்தவர்யார் கற்பகத்தைத் தொட்டவர்யார்*
*ஆராரோ ஆராரோ ஆராரடித்தாரோ*
*ஆரடித்து நீயழுதாய் அடித்தாரைச் சொல்லிடுவாய்*

தாலாட்டுப் பாடலிலே மற்றென்றைப் பார்க்கலாம். குழந்தைக்கு மாமன் தாயின் சகோதரனல்லவா? அவனிடத்திலே தாய்க்கு ஒரு தனிப்பட்ட அன்பிருப்பது இயல்பு. ஆதலால் தாய் எப்பொழுதுமே மாமனுடைய பெருமையைப் பேசுவதில் மகிழ்ச்சியடைகிருள்.

மாமன் குழந்தைக்குக் கொண்டுவந்த பரிசொன்றைக் கூறி ஒரு தாய் தாலாட்டுகிறாள்.

கண்ணுறங்கு கண்ணுறங்கு
கான மயிலே உறங்கு
தூங்காத கண்ணுக்குத்
துரும்பு கிள்ளி மையெழுதி
மையெழுதிப் பொட்டெழுதி
ஒன்று லக்ஷம் தேரெழுதி
அஞ்சு கிளி எழுதி
ஆறுமுகத் தேர் எழுதி
கொஞ்சு கிளி அஞ்செழுதிக்
கொண்டுவந்தார் உன் மாமன்
கண்ணுறங்கு கண்ணுறங்கு
கான மயிலே உறங்கு

ஆரடிச்சார் உன்னையிங்கே
அழுது வந்தாய் வாய் நோக
அடிச்சவரைச் சொல்லிடுவாய்
ஆக்கினைகள் செய்திடுவோம்
தொட்டவரைச் சொல்லியழு
தொழுவிலே போட்டுவைப்போம்
யாரும் அடிக்கவில்லை
எவருமே தீண்டவில்லை
வம்புக்கழுதாயோ
வாயெல்லாம் தேன்வடிய
கண்ணுறங்கு கண்ணுறங்கு
கான மயிலே உறங்கு

மானத்து மீனோ நீ
மேகத்து மின்கொடியோ
பாண்டவர்கள் செய்த
பதக்கத்துக் கல்லொளியோ
முன்னோர்கள் செய்தளித்த
மூக்குத்திக் கல்லொளியோ
மாது துரோபதைக்கு
வாய்த்த மருமகனோ
கொத்தே மரிக்கொழுந்தே
கோமளமே நீயுறங்காய்
கண்ணான கண்ணுறங்கு
கான மயிலே உறங்கு

மாமனைப் புகழ்ந்து கூறும் தாலாட்டைப் பார்த்தோம். தந்தையைப் புகழ்ந்து பேசும் தாலாட்டில்லையா? நிச்சயமாக இருக்கிறது. எத்தனையோ பாடல்கள் உண்டு.

தாய் தனது குழந்தைக்கு அதன் தந்தையின் வீரச் செயலை எடுத்துக் கூறும் ஒரு தாலாட்டுப் பாடலை இப் பொழுது பார்ப்போம்.

கிராமத்திலே வாழ்கின்ற தாய் அவள். தன் கணவன் பகையாளியை விரட்டிய செய்தியை அவள் தாலாட்டுப் பாடலாகக் கூறுகிறாள்.

ஆராரோ ஆராரோ—கண்ணே நீ
ஆரிரரோ ஆராரோ
சட்டைமேலே சட்டை போட்டு—உங்களப்பன்
சருகைப்புட்டை மேலே போட்டு

காற்றில் வந்த கவிதை

தலைச்சவரம் பண்ணிக்கிட்டு—உங்களப்பன்
தலைப்பாவும் வச்சுக் கிட்டு
கோயமுத்தூர் போரதுக்கு—உங்களப்பன்
குடையைக் கையில் புடிச்சிக்கிட்டு
பாதம் ரண்டும் நோகாமல்—உங்களப்பன்
பாதகொரடும் போட்டுகிட்டு
சாரட்டு வண்டி கட்டி—உங்களப்பன்
சலங்கை போட்ட மாடுகட்டி
கோயமுத்தூர் போராரு—உங்களப்பன்
கோழி கூவும் நேரத்திலே
பகையாளி பதுங்கி நிற்க—உங்களப்பன்
பார்க்காமல் போகையிலே
பறந்து பாஞ்சான் பகையாளி—உங்களப்பன்
பம்முனுரு பயமில்லாமே
பட்டாக்கத்தி வீசையிலே—உங்களப்பன்
பறந்தானே பகையாளி
மாடு ரண்டும் மிரண்டோட—உங்களப்பன்
மத யானைபோல் முன்னே ஓடி
மடக்குனுரு மாடுகளை—உங்களப்பன்
மத்தியான வேளையிலே

# பொன்னு மச்சான்

அத்தை மகன் என்றால் அவனிடத்திலே தனிப்பட்ட அன்பிருப்பது இயல்பு. அத்தையும் மாமனும் வருகிறார்கள். கூடவே நிறையத் தின்பண்டங்கள் வருகின்றன. வேறு என்னென்னவோ பரிசுகள் அவர்களிடமிருந்து கிடைத்துக் கொண்டே இருக்கின்றன.

வீட்டிலே தினமும் கூடவே இருக்கின்ற தாயும் தந்தையும் பல கட்டுப்பாடுகள், ஒழுங்கு விதிகள், கடமைகள் ஏற்படுத்துகிறார்கள். எப்பொழுதாவது ஊரிலிருந்து வரும் அத்தையும் மாமனும் அப்படி விதிகள் ஏற்படுத்துவதில்லை. நாள்தோறும் செய்யவேண்டியவற்றைச் சற்று தளர்த்துவதற்கும் அவர்கள் வருகை உதவியாக இருக்கின்றது. அந்த அத்தையிடத்திலும் மாமனிடத்திலும் தனிப்பட்ட அன்பு வளர்வது இயல்புதானே? அத்தை மகன் வருகிறான். புதிய அன்பும் வருகிறது. உடன் பிறந்தவர்களுக்குள்ளே வளர்கின்ற அன்பு ஒருவகை. அதற்கும் அத்தை மகனிடத்திலே வளர்கின்ற அன்புக்கும் வேறுபாடு உண்டு.

அத்தை மகனை மச்சான் என்று அழைப்பார்கள். மைத்துனன் என்று கூறுவதைவிட மச்சான் என்கிறபோது உறவு அதிகமாகக் காண்கிறது. அவன் அன்பு மச்சான்; பொன்னு மச்சான். பொன்போல மதிப்பிற்குரியவன்.

மச்சான் ஒருவன் கோயம்புத்தூருக்குப் புறப்படுகிறான். கொங்குநாட்டுக் கிராமத்திலிருந்து பட்டணத்திற்குப் போகிறவன் மாட்டு வண்டியில்தான் சாதாரணமாகப் போவான். காரிக் காளையையும் மயிலைக் காளையையும் பூட்டிய வண்டியிலே மச்சான் புறப்படுகிறான்.

சுகமாகப் போய் வரும்படி அவனை வழியனுப்புகிறாள் ஒரு பெண். வரும்போது தனக்கு விருப்பமான சேலையும் வாங்கிவரச் சொல்லுகிறாள்.

பட்டுச் சேலை என்று அவள் கூறவில்லை. ஆனால், பொன்னு மச்சான் பட்டுச் சேலையே வாங்கி வருவதாக வாக்களிக்கிறான். சேலை மட்டுமா? ரோஜாப் பூவும் வாங்கி வருவதாக அவன் கூறுகிறான். அவள் கேட்டது மருக் கொழுந்துதான். அன்பின் பெருமையை அவர்களுடைய பேச்சிலே நாம் காண்கிறோம்.

காரிமயிலைக்காளை பொன்னுப் பூங்குயிலே
  கட்டினேண்டி வண்டியிலே பொன்னுப் பூங்குயிலே
பாதை கிடுகிடுங்க பொன்னுப் பூங்குயிலே
  போயிவாரேன் கோயமுத்தூர் பொன்னுப் பூங்குயிலே

சொகமாகப் போயிவாங்க பொன்னு மச்சானே
  செவப்புச் சீலைவாங்கிவாங்க பொன்னு மச்சானே
வழிக்குத் துணை கூட்டிப்போங்க பொன்னு மச்சானே
  மருக்கொழுந்து வாங்கி வாங்க பொன்னு மச்சானே

பட்டுப் புடவை வாங்கி வாரேன் பொன்னுப் பூங்குயிலே
 கட்டிப்பாத்தா நல்லாயிருக்கும் பொன்னுப் பூங்குயிலே
ரோசாப் பூவும் வாங்கிவாரேன் பொன்னுப் பூங்குயிலே
 ரொம்ப உனக்கு நல்லாயிருக்கும் பொன்னுப்
 பூங்குயிலே

அவள் பொன்னுப் பூங்குயில்; அவன் பொன்னு மச்சான். அவர்களுடைய அன்பின் பெருமையை மேலே யுள்ள பாடலிலே பார்த்தோம்.

வேறொரு பூங்குயிலுக்கும் பொன்னு மச்சானுக்கும் இடையே வளர்ந்துள்ள அன்பையும் அதற்கு இடையூறாக நிற்கும் உறவினர்களைப் பற்றியும் மற்றொரு பாடலிலே காண்போம்.

ஒருத்திக்குத் தன் அத்தை மகனிடத்திலே அன்புண்டு. ஆனால், என்ன காரணத்தினாலோ அவளுடைய அண்ணன் தம்பிகள் அவளை அத்தை மகனுக்குக் கலியாணம் செய்து கொடுக்க இசையவில்லை.

அந்த மங்கை தன்னுடன் பிறந்தவர்களிடமும் மாறாத அன்புடையவள். அவர்களுடைய விருப்பத்திற்கு மாறாக ஒரு நாளும் நடக்கமாட்டாள். அண்ணனும் தம்பியும் அவளிடத்திலே கொண்டுள்ள அன்பையும் அவள் அறிவாள். அவர்களுடைய அன்பிலே வளர்ந்தவள் அவள். தன்னைத் தன் அண்ணன் தம்பிகள் அன்போடு வைத்து வளர்த்த தென்னம் பிள்ளையாக அவள் கருதுகிறாள். ஆதலால் அவள் அவர்க ளுடைய எண்ணத்திற்கு விரோதமாக ஒரு நாளும் நடக்க மாட்டாள். அதை அவள் குறிப்பாக ஒரு பாடலிலே அத்தை மகனுக்குத் தெரிவிக்கிறாள்:

ஆத்துக்கு இந்தப்புறம்—அத்தை மகனே
அண்ணன் வைத்த தென்னம் பிள்ளை—அத்தை
மகனே
ஆத்தைத்தான் தாண்டுவேனோ—அத்தை மகனே
அண்ணனைத்தான் தள்ளுவேனோ—அத்தை மகனே
சாலைக்கு இந்தப்புறம்—அத்தை மகனே
தம்பி வைத்த தென்னம்பிள்ளை—அத்தை மகனே
சாலையைத்தான் தாண்டுவேனோ—அத்தை மகனே
தம்பியைத்தான் தள்ளுவேனோ—அத்தை மகனே

அத்தை மகளை உரிமைப் பெண் என்று கூறுவார்கள். அவளைக் கலியாணம் செய்துகொள்ள உரிமை இருக்கிறதாம்! உரிமைப் பெண்ணை உரியவனுக்குக் கலியாணம் செய்து கொடுக்க மறுக்கும்போது கிராமங்களிலே பெரிய பெரிய மனத்தாங்கல்கள் ஏற்படுவதுண்டு.

அத்தை மகளைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டு மென்று ஒருவன் ஆசைப்படுகிறான். அவனுடைய ஆசையை ஒரு நாட்டுப் பாடல் அழகாக வெளியிடுகின்றது.

அத்தைமகள் ரத்தினத்தைக் கட்டலாமா
அழகான தாலிபண்ணிப் போடலாமா
குன்றிமணிச் சீலைவாங்கிக் கொடுக்கலாமா
கூசாமல் கைகோத்து நடக்கலாமா

# சொக்குப் பேச்சு

அத்தை மகளைத் திருமணம் செய்துகொள்ள ஆசை கொண்டவனின் உள்ளக் கிளர்ச்சிகளைப் பார்த்தோம்.

அவனுடைய ஆசை நிறைவேறாத காலத்தில் அவன் கட்டுகிற மனக்கோட்டையையும் பார்த்தோம்.

ஆசை நிறைவேறிய ஒருவனுடைய உள்ளக் கிளர்ச்சிகளை இப்பொழுது பார்ப்போம்.

அவன் ஓர் உழவன். கழனியிலே வேலை செய்துகொண்டிருக்கிறான். கழனியிலே வேலை செய்கிறவர்கள் குறித்த நேரத்தில் வீட்டுக்குப் போய் உணவருந்த முடியாது. வீடு தொலைவிலிருக்கும். அங்கு போய்த் திரும்புவதென்றால் நேரமாகும்; வேலை கெட்டுப் போகும்.

கிணற்றிலிருந்து தோட்டத்துக்குத் தண்ணீர் இறைக்கிறவன் அதிகாலையிலே தனது வேலையைத் தொடங்குவான். வெய்யில் ஏற ஏற மாடுகள் களைத்துப் போகும். மேலும்

வெய்யில் நேரத்திலே பயிர்களுக்குத் தண்ணீர் சரியாகப் பாயாது. அது மட்டுமல்ல. வெய்யில் நேரத்தில் பாய்கிற தண்ணீர் சூடேறிவிடும். நிலமும் காய்ந்திருக்கும். அதனால் அந்த நேரத்தில் தண்ணீர் பாய்ச்சுவது பயிருக்கு அவ்வளவு நல்லதல்ல.

அதிகாலையில் புறப்பட்டு வேலைக்கு வந்த உழவன் தனது காலை உணவை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறான். உடலுழைப்பால் அவனுக்கு நல்ல பசி எடுத்திருக்கிறது. அந்தச் சமயத்திலே கஞ்சியென்றாலும் அமுதமாக இருக்கும்.

அவனுக்கு வயிற்றுப் பசியைவிட வேறொரு பசி அதிகமாக இருக்கிறது. தனது அன்பையெல்லாம் கொள்ளை கொண்டிருக்கும் தன் மனைவியை அவன் பிரிந்து வந்து வேலை செய்துகொண்டிருக்கிறான். அவளுடைய இனிய முகத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை மேலோங்குகிறது. அன்புக்குப் பாத்திரமானவர்களை எத்தனை தடவை பார்த்தாலும் ஆசை அடங்காது. அந்த ஆசை அவன் உள்ளத்தைக் கிள்ளுகிறது. வயிற்றைக் கிள்ளும் பசியைவிட இது அதிகமாக இருக்கிறது.

அதனால், அவள் வந்தவுடன் அவளிடம் கோபித்துக் கொள்ளுகிறான். கஞ்சி கொண்டுவர நேரமாகிவிட்டதே என்று கோபமல்ல. அவளைப் பார்க்க நேரமாகி விட்டதே என்று கோபம். அன்புக் கோபம்!

கஞ்சி கொண்டுவர இவ்வளவு தாமதமா என்று அவன் தொடங்கினான். அதைக் கேட்டதும் அவள் மனம் படாத பாடு பட்டிருக்கும். வயிற்றுப் பசியால் அத்தான் வாடிப் போயிருக்கிறார் என்று அவள் வருந்தியிருப்பாள். ஆனால், அவனுடைய அடுத்த கேள்வி அவள் உள்ளத்திலே மகிழ்ச்சித் தேனை வார்த்திருக்கும். உன்னைப் பார்க்க எனக்கு இவ்வளவு நேரமாகிவிட்டதே என்கிறான் அவன். அதுதான் அவனுக்குக் கோபம். அந்தக் கோபத்தை அவள் முழுமனதோடு ஆமோதித்திருப்பாள் பாட்டைப் பார்க்கலாம்.

கஞ்சிகொண்டு வாரதுக்கு இந்நேரமா—
ஏபுள்ளே வீராயி உனேக்
காத்திருந்து பார்ப்பதுக்கு இந்நேரமா ?
சோத்துக்கு உப்புப்போட்டுக் கொண்டாந்தியா—
ஏபுள்ளே வீராயி—உன்றன்
சொக்குப் பேச்சுக் கேட்பதுக்கு இந்நேரமா ?
ஊறுகாய் ரண்டு வச்சுக் கொண்டாந்தியா—
ஏபுள்ளே வீராயி—உன்னே
உத்துப் பார்த்துப் பேச்சுக் கேட்க இந்நேரமா ?

[சோத்துக்கு-சோற்றுக்கு. உத்துப் பார்த்து-உற்றுப் பார்த்து.]

# ஏருத மலையேறி

பழநி மலையிலே பக்தியோடு ஏறி நாள்தோறும் ஆயிரக் கணக்கான மக்கள் முருகப் பிரானைத் தொழுது அவனுடைய அருளைப் பெறுகிறார்கள். அதிகாலையில் தொடங்கும் பக்தர் களின் கூட்டம் இரவு நேரம்வரை ஓய்வதில்லை

ஆண்டிலே எந்த மாதத்திலும் இந்தக் கூட்டம் குறையாது. வெய்யில் தகிக்கும்படியான அக்கினி நட்சத் திரம் வருகின்ற காலத்திலும்கூட முருகனைத் தொழுவதில் மக்களுக்குள்ள ஆர்வம் குறைவதில்லை. அந்தக் காலத்தில் தான் பழநியிலே கூட்டம் அதிகம்.

சித்திரை மாதக் கடைசியிலும் வைகாசித் தொடக்கத் திலும் அக்கினி நட்சத்திரம் வருகின்றது. அப்பொழுதுதான் கதிரவனின் உக்கிரம் உச்சநிலையை அடைகிறது. அப்பொழுது தான் பழநியில் கூடுகின்ற மக்கட் கூட்டமும் மிக அதிக மாகிறது.

உச்சிவேளை. வெய்யில், வெய்யில், ஒரே வெய்யில். பழநி மலையின் அடிவாரத்திலிருந்து உச்சிவரை "வேலும் மயிலும்" "சாமியே சரணம்" என்ற கோஷங்கள் முழங்குகின்றன.

மேலெல்லாம் திருநீறு பூசிய அடியவர்கள் மலையேறு கிறார்கள். வெய்யிலிலே வியர்வை பொங்கித் திருநீற்றைக் கரைத்துக்கொண்டு உடம்பெல்லாம் வழிகின்றது. அவர்கள் கால்கள் தளர்கின்றன. ஆனால் அவர்களுடைய பக்தி தளர வில்லை. உடலிலே ஏற்படுகின்ற தளர்ச்சியையும் போக்கக் கூறியதாக ஒரு கானம் எங்கிருந்தோ கேட்கிறது.

ஏருத மலையேறி எருதுரண்டும் தத்தளிக்கப்
பாராமற் கைகொடுப்பார் பழநிமலை வேலவனே

வாழ்க்கைப் பாதையிலே நாம் போகிறோம். எப்படிப் போகிறோம்? இரண்டு எருதுகளைப் பூட்டிக்கொண்டு இந்த உடம்பாகிய வண்டியில் அந்தப் பாதையிலே போகிறோம். ஒரு எருதுதான் நமது நெஞ்சு அல்லது உள்ளம். உணர்ச்சி களுக்கெல்லாம் நிலைக்களமாக இருப்பது. மற்றொரு எருது மனம். சிந்தனைக்கும் பகுத்தறிவுக்கும் இடமாக இருப்பது.

உள்ளத்தையும் மனத்தையும் இரண்டு காளைகளாகக் கொண்டு பூட்டிய இந்த யாக்கையென்னும் வண்டியிலேறி வாழ்க்கைப் பயணத்தைச் செய்து கொண்டிருக்கிறோம். பயணமோ மலை உச்சியை நோக்கிச் செல்ல வேண்டியது. இந்தக் காளைகளில் ஒன்று சோர்வடைந்தாலும் பயணம் கெட்டுப் போகும்; நேராக நடைபெறாது. இரண்டும் சோர்ந் தால் கேட்க வேண்டியதே இல்லை.

இப்படி எருதுகள் இரண்டும் தத்தளிக்கும்போது முருகன் பார்த்துக்கொண்டு வாளா இருக்க மாட்டார். அவர் கருணைக் கடல். அவரை அன்போடு நினைத்தால் கை கொடுத்து உதவுவார்.

இந்த உயர்ந்த கருத்தை அந்த நாடோடிப் பாடல் எடுத்துக் கூறுகிறது.

பாட்டு மேலும் கேட்கிறது. யாரோ பாடுகிறார்கள். பழநி மலையின்மீது ஏறுகின்ற ஒருவன்தான் பாடுகிறான். ஆனால் அந்தப் பாடலை யார் முதலில் பாடினார்களோ தெரியாது. பழநி மலை அந்தப் பாடலைப் பெற்றிருக்கிறது என்று வேண்டுமானால் கூறலாம். ஏனென்றால் அந்தப் பாடல் பழநி மலைக்கு அப்படிச் சொந்தமாகிவிட்டது.

எருக்கிலைக்குத் தண்ணீர்கட்டி
எத்தனைபூப் பூத்தாலும்
மருக்கொழுந்து வாசமுண்டோ
மலைப்பழநி வேலவனே

பெரியதோர் உண்மையை வெளியிடுகின்ற பாட்டு இது. எருக்கஞ் செடியைப் பயிரிட்டு அதற்குத் தண்ணீர் பாய்ச்சி என்ன பயன் கிடைக்கப் போகிறது? அது பூக்கின்ற மலர் களுக்கு மருக்கொழுந்தின் மணம் இருக்குமா? பயனில்லாத காரியத்தில் காலத்தைச் செலவழிப்பதால் வாழ்க்கை வீணா கிறது. எருக்கைப் பயிரிடுகின்ற நேரத்தில் மருக்கொழுந்தைப் பயிரிட்டால் நல்ல பலன் கிடைக்கும். இரண்டு முயற்சி களுக்கும் சிரமம் ஒன்றுதான். காலச் செலவும் வேறுபடாது. ஆனால், பலன் நிச்சயமாக வேறுபடுகிறது. ஆதலால், நல்ல பயனுடைய செயலிலேயே நாம் நமது வாழ்க்கையைச் செல விடவேண்டும் என்று இப்பாடல் குறிப்பாக உணர்த்துகிறது.

பழநி மலையிலே ஏறுகின்ற அடியவர்களில் இல்லறத்தார் உண்டு. துறவறத்தைக் கைக்கொண்டவர்களும் உண்டு. ஒரு துறவி பாடிக்கொண்டே மலையின்மீது அடியெடுத்து வைக்கிறான்.

அவன் துறவுக் கோலம் சரியாகத்தான் பூண்டிருக்கிருன். உச்சியிலே சடையிருக்கிறது. நெற்றியிலே திருநீறு இருக் கிறது. முருகனிடத்திலே மாருத பக்தி வேண்டும் என்பதை எப்பொழுதும் நினைவு படுத்துவதற்காக அவன் முருக னுடைய படையான வேலையும் கையிலே வைத்திருக்கிருன்.

இருந்தாலும் அவனுடைய மனம் ஒரு வழியில் நிற்ப தில்லை. மனம் பொல்லாதது. அதை அடக்குவது அவ்வளவு எளிதான காரியமல்ல. அடிக்கடி அது நெறியல்லா நெறி யினில் போக ஆசைப்படுகிறது. இதை அந்தத் துறவி தனது பாடலிலே கூறுகிருன்.

உச்சியிலே சடையிருக்க
உள்ளங்கையில் வேலிருக்க
நெற்றியிலே நீறிருக்கக்-கந்தையா என்
நினைவுதப்பிப் போவதென்ஞே

மனத்தைக் கட்டி வைத்து நல்ல நெறியிலே அதைப் போகச் செய்வதற்குக் கடவுளின் அருள் வேண்டும். அவ னுடைய அருளில்லாமல் மனத்தை அடக்க இயலாது. பழநி மலைப் பெருமான் கடைக் கண் பாலித்தால் மனம் கட்டுப் படும். இதைத்தான் முருகனிடத்தில் அந்தத் துறவி வேண்டி மலையேறுகிருன்.

# வேலாயுதன்

பழநி மலைக்குச் சென்றவர்கள் அங்கே முருகனுக்கு நடக்கும் அலங்காரங்களைப் பார்த்து மெய்மறந்திருப்பார்கள். ஒவ்வொரு வகையான அலங்காரத்திலும் முருகன் ஒருவகை யான தோற்றமளிக்கிறான். அபிஷேகங்கள் நடக்கின்ற காலத்திலும் அவ்வாறுதான். திருநீறு அபிஷேகம் என்றால் அப்பொழுது முருகன் வடிவம் ஒருமாதிரி இருக்கும். சந்தன அபிஷேகத்தில் வேறொரு தோற்றம்.

வெவ்வேறு வேளைகளில் செய்யும்படியான அலங்காரங் களிலும் வெவ்வேறு வகையான தோற்றத்தைப் பக்தர்கள் காண்கிறார்கள். ஒரு வேளையிலே முருகன் குழந்தைபோலக் காட்சியளிக்கிறான். மற்றொரு வேளையில் சந்நியாசிக் கோலத் தில் அவன் நிற்கிறான். அவன் எல்லா உயிர்களிலும் எல்லா நிலைகளிலும் இருப்பவனல்லவா? இந்த உண்மையை நாம் பழநிமலையிலேயே காண்கிறோம். இதை ஒரு நாடோடிப் பாடலும் கூறுகிறது.

காலை நல்ல பூசைகட்கு வேலாயுதன்
கைக்குழந்தை போலிருப்பார் வேலாயுதன்
பட்டப்பகல் பூசைகட்கு வேலாயுதன்
பண்டாரம் போலிருப்பார் வேலாயுதன்
சாயங்காலப் பூசைகட்கு வேலாயுதன்
தண்டபாணி போலிருப்பார் வேலாயுதன்
பொழுதோடப் பூசைகட்கு வேலாயுதன்
பொன்னுருவம் போலிருப்பார் வேலாயுதன்
மலைமேல் குடியிருப்பு வேலாயுதன்
மலையாளம் பார்த்திருப்பார் வேலாயுதன்
சிலைமேல் குடியிருப்பு வேலாயுதன்
தேசமெங்கும் பார்த்திருப்பார் வேலாயுதன்.

பழநியிலே காவடி எடுப்பவர்களின் கூட்டத்தை எந்த நாளிலும் பார்க்கலாம். மலையாளத்தார்கள் காவடி எடுத்து வரும்போது ஆநந்த பரவசர்களாகி ஆடிக்கொண்டு வருவார்கள். அவர்களுடைய நாட்டைப் பழநி வேலப்பன் பார்த்துக்கொண்டே பழநிமலையில் நிற்கிறாராம். ஒரு நாடோடிப் பாடல் காவடிகளின் பெருமையை வருணிக்கிறது.

ஆர்க்காட்டு மூலையிலே—சுப்பையா உனக்கு
அஞ்சுலட்சங் காவடியாம்
காவடி வருகுதென்று—சுப்பையா நீ
கரடேறிப் பார்த்தாயோ?
பாலக்காட்டு மூலையிலே—சுப்பையா உனக்குப்
பத்து லட்சங் காவடியாம்
காவடி வருகுதென்று—சுப்பையர் நீ
கரடேறிப் பார்த்தாயோ?

ஊசி படர்ந்த மலை—சுப்பையா உனக்கு
உத்தி ராட்சம் காய்க்கும் மலை
பாசி படர்ந்த மலை—சுப்பையா உனக்குப்
பங்குனித்தே ரோடும் மலை
காவடி தோன்றும் மலை—சுப்பையா நீ எனக்குக்
காட்சி தரும் நல்ல மலை
சேவடி வந்தடைந்தேன்—சுப்பையா நீ எனக்குத்
திருவருளே தந்திடுவாய்.

# கரகம்

கரக ஆட்டம் ஒரு சிறந்த நாடோடி நடனம். பூவால் அணி செய்யப் பெற்ற கரகம் தலையிலே இருக்கும். அதன் உச்சியிலே மயிலைப்போன்றும் அன்னத்தைப்போன்றும் செய்யப்பட்ட உருவம் ஆடிக்கொண்டிருக்கும். கரகமெடுப்பவன் பாட்டிற்கும் தாளத்திற்கும் ஏற்றவாறு பலவிதமான ஆட்டங்கள் காட்டுவான். எவ்வளவு வேகமாக ஆடினாலும் எத்தனை விதமாக உடலை வளைத்தாலும் கரகம் தலையை விட்டுக் கீழே விழாது. அப்படி விழாதபடி ஆடுவதிலேதான் கரகக்காரனின் சிறப்பிருக்கிறது.

மாரியம்மன் திருவிழாவிலே கரகம் ஒரு முக்கியமான அம்சம். பம்பைக்காரன் கனகனவென்று வாத்தியம் முழக்குவான். அந்த வாத்தியத்தின் ஜதிகளுக்கேற்றவாறு பாட்டிருக்கும். பாட்டிற்கேற்றவாறு கரக ஆட்டம் நடக்கும்.

கரக ஆட்டத்தின்போது பலவகையான பாடல்களைப் பாடுவார்கள். அப்படிப்பட்ட பாடல்களில் ஒன்றை இப்பொழுது பார்க்கலாம்.

ஒன்ணுங் கரகமடி—கன்னீ
ஓகோ—என் தாயே!
ஓடியாந்து பூசை வாங்கு இப்போ—தாயே

ரண்டாங் கரகமடி—கன்னீ
ஓகோ—என் தாயே!
ரண கரகம் பொன்ணுலே இப்போ—தாயே

மூன்ரும் கரகமடி—கன்னீ
ஓகோ—என் தாயே!
முத்தாலே பொன் கரகம் இப்போ—தாயே

நாலாங் கரகமடி—கன்னீ
ஓகோ—என் தாயே!
நாடி வரும் பூங்கரகம் இப்போ—தாயே

அஞ்சாங் கரகமடி—கன்னீ
ஓகோ—என் தாயே!
அசைந்தாடும் பொன் கரகம் இப்போ—தாயே

# வேகாத வெய்யில்

வயிறு வளர்ப்பதற்கு எத்தனையோ வகையான தொழில்களைச் செய்யவேண்டி இருக்கிறது. கூலிவேலை செய்பவர்கள் பல பேர். வேறொருவரிடத்திலே வேலை செய்வதென்றால் அவருடைய விருப்பத்திற்கேற்றவாறு நடக்க வேண்டும். எல்லோராலும் அப்படி நடக்க முடிகிறதா?

அப்படிப்பட்ட வேலையை வெறுப்பவர்கள் உண்டு. பிறருக்கு அடங்கி வேலை செய்வதில் சிரமங்கள் பல இருக்கின்றன. இளகிய உள்ளம் படைத்தவர்கள் அவ்வளவு கண்டிப்பாக வேலை வாங்கமாட்டார்கள். கூலிக்காரர்களை மனிதரென்றே நினைக்காதவர்களும் இருக்கிறார்கள். அவர்களுக்குப் பயந்து கூலி வேலையை விட்டொழித்தவர்களும் உண்டு.

கூடை முறம் கட்டுகிறவர்கள் பிறருக்குப் பணிந்து வேலை செய்ய வேண்டியதில்லை. சிரமப்பட்டுப் பல கூடைகள் முடைந்தால் ஊதியம் அதிகமாகக் கிடைக்கும். இல்லாவிட்டால் ஊதியம் குறையும். பிறருடைய கண்டனம்

இதிலே இல்லை. ஆனால், எல்லோரும் கூடை முறங் கட்ட முடியுமா? ஏதோ ஒரு சிலர்தான் இந்தத் தொழிலைச் செய்யலாம்.

மற்றவர்கள் வேறு வேலை தேடவேண்டும். மலைச் சாரலிலே உள்ள காட்டிற்குச் சென்று விறகு கொண்டு வந்து விற்றுச் சிலபேர் பிழைக்கிறார்கள். சுதந்திரமான வேலைதான் இது. ஆனால், இதிலும் எத்தனையோ சிரமங்கள் உண்டு.

விறகு வெட்டிக் கற்றை கற்றையாகக் கட்டித் தலையிலே சுமந்து வந்து பக்கத்திலே உள்ள ஊர்களிலோ பட்டணங் களிலோ விற்கவேண்டும். வெய்யிலென்று பார்க்க முடியாது; மழையென்று பார்க்க முடியாது. கல்லிலும் முள்ளிலும் நடக்க வேண்டிவரும். அதற்கெல்லாம் துணிந்துதான் இந்த வேலையை மேற்கொள்ள வேண்டும்.

விறகு வெட்டிப் பிழைக்கும் பெண்கள் பாடுவ்தாக ஒரு பாட்டுண்டு. அது அவர்களுடைய துன்பங்களையே எடுத்துக் கூறுகின்றது. துன்பங்களைக் கூறினாலும் அதைப் பாடுகின்ற போது கொஞ்சம் அலுப்புக் குறையத்தான் செய்கிறது. அதற்காகவே அப்பாடலைப் பாடுகிறார்கள். கேள்வியும் பதிலுமாகப் பாடல் வருகிறது.

வேகாத வெயிலுக்குள்ளே—ஏதில்லலோலேலோ
விறகெடுக்கப் போற பெண்ணே—ஏதில்லலோலேலோ
காலுனக்குப் பொசுக்கலையோ—ஏதில்லலோலேலோ
கத்தாளை முள் குத்தலையோ—ஏதில்லலோலேலோ

காலுப் பொசுக்கினாலும்—ஏதில்லலோலேலோ
கத்தாளைமுள்ளுக் குத்தினாலும்—ஏதில்லலோலேலோ
காலக் கொடுமையாலே—ஏதில்லலோலேலோ
கஞ்சிக்கே கஷ்டமாச்சே—ஏதில்லலோலேலோ

கஞ்சிக் கலயங்கொண்டு—ஏதில்லலோலேலோ
காட்டுவழி போரபெண்ணே—ஏதில்லலோலேலோ
கல்லுனக்குக் குத்தலையோ—ஏதில்லலோலேலோ
கல்லுமிதி வந்திடாதோ—ஏதில்லலோலேலோ

கல்லெனக்குக் குத்தினாலும்—ஏதில்லலோலேலோ
கல்லுமிதி வந்திட்டாலும்—ஏதில்லலோலேலோ
விதிவசம் போலாகணுமே—ஏதில்லலோலேலோ
வெளியெங்கும் நடக்கணுமே—ஏதில்லலோலேலோ

மத்தியான வேளையிலே—ஏதில்லலோலேலோ
மார்குலுங்கப் போர பெண்ணே—ஏதில்லலோலேலோ
கஞ்சி குடிக்கையிலே—ஏதில்லலோலேலோ
கடிச்சுக்க நீ என்ன செய்வாய்—ஏதில்லலோலேலோ

கஞ்சி குடிக்கிறதே—ஏதில்லலோலேலோ
கடவுள் செஞ்ச புண்ணியமே—ஏதில்லலோலேலோ
கம்மங் கஞ்சிக் கேத்தாப்பிலே—ஏதில்லலோலேலோ
காணத்தொவையல் வைச்சிருக்கேன்—ஏதில்லலோ
லேலோ

கஸ்டப்பட்டுப் பாடுபட்டு—ஏதில்லலோலேலோ
களுத்தொடியச் செமக்கும் பெண்ணே—ஏதில்லலோ
லேலோ

எங்கே போய் விறகெடுத்து—ஏதில்லலோலேலோ
என்ன செய்யப் போராய் பெண்ணே—ஏதில்லலோ
லேலோ

காட்டுக்குள்ளே விறகொடிச்சு—ஏதில்லலோலேலோ
வீட்டுக்கதைச் சுமந்துவந்து—ஏதில்லலோலேலோ
காப்பணத்து விறகுவித்து—ஏதில்லலோலேலோ
கஞ்சிகண்டு குடிக்கணுமே—ஏதில்லலோலேலோ.

[கத்தாழை-கற்றாழை. கல்லுமிதி-கல் குத்தி ஏற்படும் ஒருநோய்.]

# ஏலேலோ ஐலசா

வயலிலே பெண்கள் அணியணியாகச் சென்று நாற்று நடுகிருர்கள். அவர்கள் பாதங்கள் சேற்றிலே மறைந்திருக்கின்றன. கையிலே நெற் பயிரின் இள நாற்றுகள் கற்றையாக இருக்கின்றன. இடக் கையில் நாற்றுக் கற்றையைப் பிடித்துக்கொண்டு வலக்கையால் ஒன்றிரண்டு நாற்றுக்களைப் பிரித்தெடுத்துப் பண்படுத்திச் சேருக்கிய வயலிலே நடுகிருர்கள்.

வெய்யில் எரிக்கிறதென்ருலும் நடவு வேலையை விட முடியுமா? அந்தப் பெண்களின் உழைப்பே உலகத்திற்குச் சோறு வழங்க உதவுகிறது. உழுது பயிரிடுவோர் தமது கடமையை என்றும் செய்யவேண்டும். அப்பொழுதுதான் உலகம் பசியறியாமல் வாழும்.

உழைப்பால் ஏற்படும் சலிப்பைப் போக்குவதற்கு நாற்று நடும் பெண்கள் பாடுகிருர்கள். ஏலேலோ ஐலசாப் பாட்டு. எந்தப் பாடலாஞலும் சரி. அது சலிப்பைப் போக்குகிறதல்லவா? ஒருத்தி முதலில் பாட்டைத்

தொடங்குகிருள். அவள் முடிக்கும்போது ஐலசா ஐலசா என்று மற்றவர்கள் கூவுகிருர்கள். வேலையிலே புதிய உற்சாகம் பிறக்கிறது. பாட்டுத் தந்த உற்சாகம் அது:

சாலையிலே—ஏலேலோ
    தகரக்கள்ளி—ஐலசா
சாஞ்ச தெல்லாம்—ஏலேலோ
    திருகு கள்ளி—ஐலசா
திருகு கள்ளி—ஏலேலோ
    பூவெடுக்க—ஐலசா
திருடு ரானே—ஏலேலோ
    சின்னப் பையன்—ஐலசா
ஆறு வண்டி—ஏலேலோ
    நூறு சக்கரம்—ஐலசா
நம்ம தச்சன்—ஏலேலோ
    செய்த வண்டி—ஐலசா
மாட்டு வண்டி—ஏலேலோ
    ஓட்டு ரானே—ஐலசா
மாய மாக—ஏலேலோ
    ஓட்டு ரானே—ஐலசா
மானத் திலே—ஏலேலோ
    சாலே போட்டு—ஐலசா
மாதுளம் பூ—ஏலேலோ
    பாவி ருக்கு—ஐலசா
அங்கிருந்து—ஏலேலோ
    பேசுரானே—ஐலசா
ஆகாயத்தில்—ஏலேலோ
    பேசுரானே—ஐலசா

ஏலேலோ ஐலசாப் பாட்டுக்கள் எத்தனையோ இருக்கின்றன. அவற்றின் இசை எளிமையானதாக இருந்தாலும்

உள்ளத்தைக் கவரக் கூடியது. அந்த இசையில் மக்கள் உடற் சிரமத்தையும் அலுப்பையும் மறக்கிறார்கள்.

இன்னும் ஒரு பாடலைப் பார்ப்போம்:

மண்ணை நம்பி—ஏலேலோ
மர மிருக்க—ஐலசா
மரத்தை நம்பி—ஏலேலோ
கிளையிருக்க—ஐலசா
கிளையை நம்பி—ஏலேலோ
இலையிருக்க—ஐலசா
இலையை நம்பி—ஏலேலோ
பூவிருக்க—ஐலசா
பூவை நம்பி—ஏலேலோ
பிஞ்சிருக்க—ஐலசா
பிஞ்சை நம்பி—ஏலேலோ
காயிருக்க—ஐலசா
காயை நம்பி—ஏலேலோ
பழமிருக்க—ஐலசா
பழத்தை நம்பி—ஏலேலோ
நீ யிருக்க—ஐலசா
உன்னை நம்பி—ஏலேலோ
நானிருக்கேன்—ஐலசா

# குன்றுடையான் கதை

குன்றுடையான் கதையை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா? கொங்கு நாட்டுக் கிராமங்களுக்குச் சென்றால் இந்தக் கதையைக் கேட்கலாம். இது ஒரு நீண்ட கதை. இரண்டுபேர் எதிர் எதிராக அமர்ந்து உடுக்கையடித்துக் கொண்டு குன்றுடையான் கதையைப் பாட்டாகவே பாடுவார்கள். இடையிடையே வசனத்தில் விளக்கமும் வரும். ஆனால், கதை பெரும்பாலும் பாட்டாகவே நீளும். இதை அண்ணன்மார் கதை என்று சொல்லுவார்கள். பெரியண்ணன், சின்னண்ணன் என்ற இரண்டு சகோதரர்களின் வீர வரலாற்றையும், அவர்கள் செய்த போர்களைப் பற்றியும் இந்தக் கதையிலே கேட்கலாம். குன்றுடையான் இவர்களின் தந்தை. இரவு நேரங்களிலே கதை நடக்கும். ஒரு நாள் இரண்டு நாட்களில் முடிந்துவிடாது. மாதக் கணக்கிலே இது தொடரும். பாட்டுப் பாடுபவர்களுக்குத் தானியமாகவும் பணமாகவும் நல்ல வரும்படி கிடைக்கும். கொங்கு நாட்டு வேளாளர்கள் இக்கதையைத் தங்கள் இனத்தின் வரலாறாகவே கருதுகிறார்கள். கொங்கு நாட்டிற்கு

வந்து அங்கே அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன் ஆதிக்கம் பெற்ற விவரத்தை இந்தக் கதை நெடும் பாட்டுத் தெரிவிக்கிறது.

அண்ணன்மார் இருவரும் இன்று தெய்வமாகப் போற்றப்படுகிறார்கள். அவர்களிடத்திலே கொங்கு நாட்டு வேளாளர்களுக்கு மிகுந்த பக்தியுண்டென்பதை எளிதில் தெரிந்து கொள்ளலாம். ஆண் குழந்தைகளுக்குப் பெரிய சாமி, சின்னசாமி என்று பெயர் வைப்பது இவர்களிடையே பெரு வழக்கு. இந்தப் பெயர்கள் வீரர்களான அந்த இரு சகோதரர்களை நினைவூட்டுவனவாகும்.

அவர்களிலே பெரியசாமி பொறுமை வாய்ந்தவர்; நிதானமாக எதையும் ஆலோசித்துச் செய்பவர். சின்னசாமி அப்படியல்ல. மிகுந்த கோபக்காரர். சண்டை யென்றால் அவருக்கு மிகுந்த விருப்பம். அவருடைய கோபத்தையும் வீரப் போரையும் வருணிப்பதென்றால் குன்றுடையான் கதையைப் பாட்டாகப் பாடுபவர்களுக்கு ஒரு தனி உற்சாகம். அவர்களுடைய பாட்டிலும், தொனியிலும், நடிப்பிலும் அவருடைய கோபத்தையும் வீரப் போரையும் நாம் உணரலாம்.

சின்னசாமிக்கு ஒரு சமயத்திலே வந்த கோபத்தை விளக்கும் பாடற் பகுதியை மட்டும் இங்கே பார்ப்போம்.

கோபம் பிறந்திட்டது—சின்னருக்குக்
கொள்ளி கொண்டு வீசுதிப்போ
வெள்ளரளிக் கண்கள் ரண்டும்—சின்னருக்குச்
செவ்வரளி பூக்குது பார்
நீல மலர்க் கண்கள் ரண்டும்—சின்னருக்கு
நெருப்புத் தணல் ஆகுதிப்போ
எட்டுக் கட்டு உருக்கி வார்த்த—சின்னருந்தான்
எம வாளைக் கையெடுத்தார்

கத்தி சுழட்டுறது—சின்னர் வேகம்
கார் மின்னல் மின்னுது பார்
ஆனையின் கூட்டத்திலே—ஒரு நல்ல
ஆளி வந்து பாய்ந்தது போல்
ஆடுகளின் கூட்டத்திலே—ஒரு நல்ல
வேங்கை வந்து பாய்ந்ததுபோல்
முன் வீச்சுக் காயிரமாம்—அங்கே அவர்
பின் வீச்சுக் காயிரமாம்
வெள்ளரிக்காய் வெட்டுவதுபோல்—சின்னருந்தர்ன்
வீசி வீசித் தள்ளுறாரு

சின்னசாமி கத்தி வீசினால் கார் மின்னல் மின்னுவதைப் போலிருக்குமாம். அவர் போர்க்களத்திலே புகுந்தால் ஆடுகளின் கூட்டத்திலே வேங்கைப்புலி பாய்ந்தது போலிருக்குமாம். வெள்ளரிக்காயை வெட்டுவது எவ்வளவு எளிது! அவ்வளவு எளிதாக அவர் பகைவர்களை வெட்டி வீழ்த்து வாராம்.

குன்றுடை"யான் கதை இன்றும் கொங்குநாட்டிலே மக்களால் பெரிதும் விரும்பப்படுகிறது. நாடோடிப் பாடல் வகையிலே இது மிக நீளமானது. இதன் மூலம் வரலாற்று உண்மைகளையும் காணலாம்.

# குண்டு வயிறன்

சின்னக் குழந்தைக்குப் பாட்டென்றால் மிகவும் பிடிக்கும். பாட்டைக் கேட்பதற்கு மட்டுமல்ல; எளிமையான பாட்டாக இருந்தால் தானே பாடுவதற்கும் குழந்தை விரும்புகிறது.

குழந்தைகளுக்காகத் தனிப்பட்ட பாடல்கள் எல்லா மொழிகளிலும் உண்டு. சந்தமும் ஓசையும் அவற்றில் முக்கியம்; குழந்தைக்குப் புரியும்படியான எளிய சொற்களிலும் மழலைப் பேச்சிலும் அவை இருக்க வேண்டும். சந்திரன் என்று சொல்லுவதற்குப் பதிலாக சந்தமாமா என்றால் குழந்தைக்கு நன்கு விளங்கும்.

ஆங்கிலத்திலே குழந்தைகளுக்காக உள்ள பாடல்களுக்குப் பொருளற்ற சந்தப் பாடல்கள் என்ற பெயர் உண்டு. ஏனெனில் அவற்றிலே பல பாடல்களில் சந்த நயத்தைத் தவிரப் பொருள் இருக்காது.

தமிழிலே உள்ள நாடோடி வகையைச் சேர்ந்த குழந்தைப் பாடல்களில் பொருள் ஆழமற்ற பாடல்களையும் பொருள் நிறைந்த பாடல்களையும் காணலாம்.

ப

குழந்தையைப் பார்த்துச் சாய்ந்தாடும்படி கூறுவதாக ஒரு பாட்டு வருகிறது.

சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு
தாமரைப் பூவே சாய்ந்தாடு
கொஞ்சுங் கிளியே சாய்ந்தாடு
குத்து விளக்கே சாய்ந்தாடு

இதைப் பாடிக்கொண்டு சாய்ந்து சாய்ந்து ஆடுவதில் குழந்தைக்கு அலாதியான ஓர் இன்பம் ஏற்படுகிறது.

நிலாவைப் பார்த்துக் குழந்தை கூவுகிறது; அதைத் தன்னிடம் வரும்படி கைகாட்டி அழைக்கிறது.

நிலா நிலா வா வா
நில்லாமல் ஓடிவா
மலை மேலே ஏறிவா
மல்லிகைப் பூக் கொண்டுவா

நிலாவின் வெண்கற்றைக் கதிர்கள் மல்லிகைப் பூக்களைப் போல இருக்கின்றன. முல்லைகதிர் என்றுகூட அவற்றை வருணிப்பதுண்டு.

இன்னும் சில குழந்தைப் பாடல்கள் கடவுள் வணக்கமாகவும் பக்தியிலே உள்ளத்தைச் செலுத்த உதவுவனவாகவும் இருக்கின்றன. சின்னக் குழந்தைக்கு அபிநயத்தோடு பிள்ளையார் வணக்கம் சொல்லிக் கொடுப்பார்கள்.

குள்ளக் குள்ளனை
குண்டு வயிறனை
வெள்ளிக் கொம்பனை
விநாயகனைத் தொழு.

மற்றொரு பாடல் கடவுளுடைய அருளிலே உள்ள நாட்டத்தை விவரிக்கிறது.

பொழு தெப்போ விடியும்
பூ வெப்போ மலரும்
சிவனெப்போ வருவார்
அரு ளெப்போ தருவார்.

# பூப் பொங்கல்

பொங்கலோ பொங்கல்! தை பிறந்த முதல் நாள் பெரும்பொங்கல். அடுத்த நாள் மாட்டுப் பொங்கல். மூன்றும் நாள் பூப் பொங்கல். தை பிறந்தால் இப்படிக் கிராமங்களிலே ஒரே பொங்கல் மயமாக இருக்கும். பொங்கலோ பொங்கல்!

மாட்டுப் பொங்கல் முடிந்த மறுநாள் ஆண்களெல்லோரும் மாலை கோவிலுக்குப் போய்விடுவார்கள். மாலை கோவில் என்பது லிங்க வடிவாகவுள்ள சிவனுக்கு அமைந்துள்ள கோயில். அண்டை என்று வழங்கும் மூங்கிற் குழாயிலே பால் கொண்டு சென்று அந்த லிங்கத்திற்கு அபிஷேகம் செய்வார்கள்.

ஆண்களெல்லாம் மாலை கோவில் சென்ற பிறகு ஊரிலே சிறுமிகளும் பருவமடைந்த மங்கையரும் பூப் பொங்கல் விழாக் கொண்டாடுவார்கள்.

ஊனுன் கொடி என்று ஒருவகையான கொடி மைதானத்திலே நீண்டு வளைந்து வளைந்து கரும்பச்சைப்

புதராகப் படர்ந்திருக்கும்; வெண்சிவப்பான பூக்கள் கொத்துக் கொத்தாக அதிலே பூத்துக் குலுங்கும். அவற்றை மாட்டுப் பொங்கலன்றே பறித்து வந்து சிறுமிகள் தங்கள் பூக்கூடைகளில் நிரப்பிக் கொள்ளுவார்கள். பூப் பொங்கலன்று அவர்கள் அனைவரும் பூக்கூடைகளுடனும் பலகாரக் கூடைகளுடனும் விநாயகர் கோயிலில் கூடிக் கும்மியடிப்பார்கள். எத்தனை வகையான வண்ணப் பாட்டுகள் அவர்கள் வாயிலே!

பாட்டைத் தொடங்குவாள் ஒருத்தி. அவளைத் தொடர்ந்து அனைவரும் பின்னால் பாடிக்கொண்டு கும்மியடிப்பார்கள். இதோ ஒரு பாட்டைப் பாருங்கள்.

ஒரு மிளகு கணபதியே
ஒண்ணு லாயிரம் சரவிளக்கு
சரவிளக்கு நிறுத்தி வச்சு
சாமியென்று கையெடுத்து
பொழுது போர கங்கையிலே
பொண்டுகளெல்லாம் நீராடி
நீராடி நீர் தெளிச்சு
நீல வர்ணப் பட்டுடுத்தி
பட்டு டுத்திப் பணிபூண்டு
பாலே ரம்மன் தேரோட
தேருக்கிட்டே போகலாமா
தெய்வமுகங் காண்கலாமா.

பாட்டுக்களெல்லாம் பள்ளிக்கூடத்திலே படித்தவையல்ல. அவை நாடோடிப் பாடல்கள். எந்தக் காலத்திலிருந்தோ தெரியாது, அவை கிராமங்களிலே ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

இந்தக் கும்மி அன்று ஊரெல்லாம் நடைபெறும். வீடு வீடாகச் சென்று கும்மியடித்துவிட்டுச் சிறுமிகள் ஆற்றங் கரைக்கும் குளக்கரைக்கும் புறப்படுவார்கள்.

கூடையிலே பட்சணங்கள் இருக்கும். மார்கழி மாதத் திலே நாள்தோறும் வாசலிலே வைத்த பிள்ளையார்கள் இருக்கும். பலவகையான பூக்களும் நிறைந்திருக்கும்.

பிள்ளையார்களை ஆற்றிலோ குளத்திலோ போட்டுத் திரும்ப வேண்டும். அதற்காகத்தான் சிறுமிகள் புறப்படு கிருர்கள்.

அவர்கள் 'ஒலையக்காள்' என்ற மங்கையொருத்தி ஆற்றுக்குப் புறப்படுவதாகக் கற்பனை செய்து வேடிக்கை யாகப் பாடுவார்கள். ஒலையக்காள் வருணனை முதலிலே வரும். பாட்டிலே ஒரு பகுதியை ஒருத்தி பாடுவாள். மற்ற வர்களெல்லாம் "ஓலே......" என்று கூறுவார்கள்.

ஒலையக்கா கொண்டையிலே
ஒருசாடு தாழம்பூ
தாழம்பூச் சித்தாடை
தலைநிறைய முக்காடு (ஓ...லே)

மாலைஅ ரைப்பணமாம்
மயிர்கோதி கால்பணமாம்
மாலைகு றைச்சலென்று
மயங்குருளாம் ஒலையக்கா (ஓ...லே)

சேலைஅ ரைப்பணமாம்
சித்தாடை கால்பணமாம்
சேலைகு றைச்சலென்று
சிணுங்குருளாம் ஒலையக்கா (ஓ...லே)

தான்போட்ட சிந்தாக்கைத்
தான்கழட்ட மாட்டாமல்
தாயுடனே சீராடித்
தான்போறாள் ஓலையக்கா (ஓ...லே)

மேற்படியைத் தட்டிவிட்டு
வெத்திலைக் காம்பைக் கிள்ளிவிட்டு
மேனாட்டு ஓலையக்கா
மேற்கே குடிபோறாள் (ஓ...லே)

நாழிநாழி நெல்குத்தி
நடுக்களத்தில் பொங்கல் வைத்து
பொட்டென்ற சத்தங் கேட்கப்
போறாளாம் ஓலையக்கா (ஓ...லே)

தளிஞ்சிச் செடியடியே
தாய்க்கோழி மேய்கையிலே
தாய்க்கோழிச் சத்தங்கேட்டுத்
தான்போறாள் ஓலையக்கா (ஓ...லே)

பொரும்பிச் செடியடியே
பொறிக்கோழி மேய்கையிலே
பொறிக் கோழிச் சத்தங்கேட்டுப்
போறாளாம் ஓலையக்கா (ஓ...லே)

ஓலையக்கா கொண்டையிலே
ஒரு சாடு தாழம்பூ
தாழம்பூச் சித்தாடை
தலைநிறைய முக்காடு (ஓ...லே)

ஆற்றுக்குச் சென்ற பிறகு மறுபடியும் பூப் பறிப் பார்கள். பெண்களுக்குப் பூவென்றால் ஒரே ஆசை. எத்தனை பூக் கிடைத்தாலும் ஆசை அடங்காது. இறைவனுக்குப் பூப் பறிப்பதிலே ஒரு தனி ஆர்வம் அவர்களுக்கு உண்டு.

ஆத்துக்குள்ளே அந்திமல்லி
அற்புதமாய்ப் பூ மலரும்
அழகறிந்து பூ வெடுப்பாய்
ஆறுமுக வேலவர்க்கு
சேத்துக் குள்ளே செண்பகப்பூ
திங்களொரு பூ மலரும்
திட்டங்கண்டு பூ வெடுப்பாய்
தென்பழநி வேலவர்க்கு

இப்படிப் பாடிக்கொண்டு பூப் பறிக்கும்போது ஆடவர் களும் அந்த இன்பப் பணியிலே உதவி செய்ய வருவார்கள். அவர்களும் விளையாட்டாகப் பாடுவதாகப் பல பாடல்கள் வரும்.

பூப்பறிக்கிற பெண்டுகளே
பூக் கொடுத்தால் ஆகாதா?
பூப்பறிக்கிற பெண்டுகளே
பூச்சொரிந்தால் ஆகாதா?
பறித்த பூவையும் பெட்டியிலிட்டுத்
தொடுந்த மாலையும் தோளிலிட்டுப்
பூப்பறிக்கிற பெண்டுகளே
பூக்கொடுத்தால் ஆகாதா?

இந்தக் கேள்விக்குப் பெண்கள் பதில் சொல்லுவார்கள்.

பூப் பறிப்பதும் இன்னிக்குத்தான்
பெட்டியிலிடுவதும் இன்னிக்குத்தான்
அதிசயமான இந்த ஊரிலே
அள்ளி இறைப்பதும் இன்னிக்குத்தான்
(பூவோ...பூவு)

நெல்லுவிளையுது நீலகிரி
நெய்க்கும்பம் சாயுது அத்திக்கோடு
பாக்கு விளையுதாம் பாலக்காடு
பஞ்சம் தெளியுதாம் இந்தஊரில்
(பூவோ...பூவு)

பிறகு பலவகையான பழங்களைப் பறிக்கத் தொடங்குவார்கள். அங்கேயும் பாட்டுத்தான்.

ஏரிக்கரையோரம் இலந்தை பழுத்திருக்கும்
ஏறி உலுக்குங்கப்பா—எனக்கிளைய தம்பிமாரே
பார்த்துப் பொருக்குங்கம்மா—ஒயிலன்னமே
பசுங்கிளியே தங்கைமாரே—ஒயிலன்னமே

ஆத்தங்கரையோரம் அத்தி பழுத்திருக்கும்
அடிச்சு உலுக்குங்கப்பா—அன்புள்ள தம்பிமாரே
அள்ளிப் பொருக்குங்கம்மா—ஒயிலன்னமே
அன்புள்ள தங்கைமாரே—ஒயிலன்னமே

குளத்தங்கரையோரம் கொய்யாப் பழுத்திருக்கும்
குலுக்கி உலுக்குங்கப்பா—குணமுள்ள தம்பிமாரே
குனிந்து பொருக்குங்கம்மா—ஒயிலன்னமே
குணம் நிறைந்த தங்கைமாரே—ஒயிலன்னமே

இவ்வாறு ஆண்களும் பெண்களும் மாறிமாறிப் பாடுவதாகப் பாடல்கள் ஆற்றங்கரையில் ஒலிக்கும்.

பிள்ளையார்களை இனி ஆற்றிலே போடவேண்டும். பிள்ளையாரை வழியனுப்பவும் பாடல்கள் உண்டு. மார்கழியிலே பிடித்து வைத்த பிள்ளையார்களை வட்ட வட்டமாகத் தட்டிக் காய வைத்திருப்பார்கள் அல்லவா? அந்தப் பிள்ளையாருக்குப் பாட்டு.

வட்ட வட்டப் புள்ளாரே
வாழைக்காய்ப் புள்ளாரே
உண்ணுண்ணு புள்ளாரே
ஊமத்தங்காய்ப் புள்ளாரே
கண்ணென்று சொல்லட்டுமா
கண்ணுன புள்ளாரே
வட்டவட்டப் புள்ளாரே
வாழைக்காய்ப் புள்ளாரே
வார வருஷத்துக்கு
வந்துவிட்டுப் போவாயோ?
போன வருஷத்துக்குப்
போய்விட்டு வந்தாயோ?
வட்டவட்டப் புள்ளாரே
வாழைக்காய்ப் புள்ளாரே
உண்ணுண்ணு புள்ளாரே
ஊமத்தங்காய்ப் புள்ளாரே

இந்தப் பிள்ளையாரை வழியனுப்புவதற்குப் பாடும் பாடலிலே அவர்களுடைய சோகமும் கலந்திருக்கும்,

போருயோ போருயோ போருயோ புள்ளாரே?
வாராயோ வாராயோ வருவாயோ புள்ளாரே?
போருயோ புள்ளாரே போருயோ புள்ளாரே?
வாராயோ புள்ளாரே வருவாயோ புள்ளாரே?

சிந்தாமல் சிதருமல் வளர்த்தினேன் புள்ளாரே
சித்தாத்துத் தண்ணியிலே சிந்துகிறேன் புள்ளாரே(போ)

வாடாமல் வதங்காமல் வளர்த்தினேன் புள்ளாரே
வாய்க்காலுத் தண்ணியிலே விட்டேனே புள்ளாரே(போ)

பூவோடு போருயோ போயிட்டு வாராயோ
பூவோடு வாராயோ பெண்களைப் பாராயோ (போ)

பிள்ளையாரை வழியனுப்பிவிட்டு மறுபடியும் கும்மி விளையாட்டு.

ஒரு செடியாய் ஒரு சிமிருய்
ஒண்ணுயிரம் செண்பகப்பூவாய்
செண்பகப்பூவைப் பறித்தெடுத்துச்
சிலம்புச் சித்திரக் கோலமிட்டு
இடி இடித்து மழை பொழிய
இருகரையும் பெருகிவர
பெருகிவரும் தண்ணியிலே
பெண்களெல்லாம் நீராடி
நீராடி நீர் குளித்து
நீலவர்ணப் பட்டுடுத்தி

கடலாடிக் கடல்குளித்து
காஞ்சீவரம் பட்டுடுத்தி
பட்டுடுத்திப் பணி பூண்டு
பரமனுக்குப் பூப்போடு

இந்தப் பாட்டு முடிந்ததும் வேறொரு வகையான பாட்டும் கும்மியும்.

ஒண்ணும் படிகடந்து
ஒருவகைப் பூவெடுத்து
பூவெடுத்துப் பெட்டியிட்டுப்
போய்ச் சேர்ந்தோம் கன்னிமலை

கன்னி கடந்தமலை
கைலாச வீரமலை
வீரமலைக் கோவிலிலே
விளையாடப் பெண்கள் வந்தோம்

ரண்டாம் படிகடந்து
ரண்டுவகைப் பூவெடுத்து
பூவெடுத்துப் பெட்டியிட்டுப்
போய்ச் சேர்ந்தோம் கன்னிமலை

கன்னி கடந்தமலை
கைலாச வீரமலை
வீரமலைக் கோவிலிலே
விளையாடப் பெண்கள் வந்தோம்

மூணும்படிகடந்து
　　மூனுவகைப் பூவெடுத்து
பூவெடுத்துப் பெட்டியிட்டுப்
　　போய் சேர்ந்தோம் கன்னிமலை

கன்னி கடந்தமலை
　　கைலாச வீரமலை
வீரமலைக் கோவிலிலே
　　விளையாடப் பெண்கள் வந்தோம்

இந்த சமயத்திலே கிருஷ்ணனுடைய லீலைகளை நினைத்துப் பாட்டும் கும்மியும் தொடங்கும்.

உரியிலே வெண்ணெயிருக்கோ—கிருஷ்ணன்
　　உறிஞ்சிக் குடித்தாரு—
சட்டியிலே வெண்ணெயிருக்கோ—கிருஷ்ணன்
　　சாய்த்துக் குடித்தாரு (உரியிலே)

பாக்குமரத்திலே—கிருஷ்ணன்
　　பந்து விளையாட—
தேக்கு மரத்தடியே—கிருஷ்ணன்
　　தேன் மொழியாளைக் கண்டார் (உரியிலே)

செண்பகச் செடியடியே—கிருஷ்ணன்
　　செண்டு விளையாட
செண்பகப் பூவாலே—கிருஷ்ணன்
　　செண்டு முடிந்தாரு (உரியிலே)

அரசமரத்தடியே—கிருஷ்ணன்
அம்புவிளையாட
அரசியைக் கண்டதுமே—கிருஷ்ணன்
அம்பை விடுத்தாராம் (உரியிலே)

இவ்வாறு கும்மியும் பாடலும் நெடு நேரம் நடக்கும். பிறகு பட்சணக் கூடைகள் காலியாகும். கூடியிருந்தவர் களுக்கெல்லாம் நிறையக் கிடைக்கும்.

இவ்வாறு சிறுமிகளின் பூப் பொங்கல் இன்பமாக முடியும்.

# ராட்டைப் பாட்டு

ராட்டையிலே நூல் நூற்கும் பழக்கம் வெகு காலமாக இந்நாட்டில் இருக்கிறது. இடையிலே இந்தப் பழக்கம் விட்டுப் போயிற்று. மறுபடியும் ராட்டைக்குப் புத்துயிர் கொடுத்தவர் காந்திமகான்.

ஆனல், ராட்டைப் பாட்டு என்ற நாடோடிப் பாடல் இப்பொழுது ஏற்பட்டதல்ல. இது பழங்காலத்திலிருந்து கிராமங்களிலே ஒலிக்கும் ஒரு நகைச்சுவைப் பாட்டு.

ஒருத்தி ராட்டையிலே நூல் நூற்ருளாம். அந்த நூலைச் சந்தையிலே கொண்டுபோய் விற்ருளாம்.

நூலை விற்ற காசைக் கொண்டு அவள் பலவகையான பண்டங்கள் வாங்குகிருள். அடடா, அவளுக்குக் கிடைத்த காசில் என்னென்ன வாங்க முடிகிறது!

பாட்டைப் பார்ப்போம். முதலில் அவள் நூல் நூற்ற பெருமையைக் கேட்கலாம்.

ராட்டை யென்றால் ராட்டை
கருங்காலி ராட்டை
ஒரு பூட்டு நூலைத்தான்
ஓடி ஓடி நூற்றாளாம்
ஓடி ஓடி நூற்றாளாம்
ஒன்பது பலம் நூற்றாளாம்
பாடிப் பாடி நூற்றாளாம்
பத்துப் பலம் நூற்றாளாம்
வேளை வேளை நூற்றாளாம்
விசுக் கூடையில் போட்டாளாம்.

விசுக் கூடையில் நூலைப் போட்டாயிற்று. இனிச் சந்தைக்குப் போக வேண்டியதுதான். தனியாகச் சந்தைக்குப் போக முடியுமா? துணை வேண்டாமா? அதற்காக அவள் மாமியையும், மதனியையும் மற்றவர்களையும் கூப்பிடுகிறாள். சந்தைக்கு வரவில்லையா என்று அவர்களைக் கேட்கிறாள்.

மாமி வல்லையா சந்தைக்கு
மதனி வல்லையா சந்தைக்கு
சின்னக்கா வல்லையா சந்தைக்கு
பொன்னக்கா வல்லையா சந்தைக்கு
நங்கை வல்லையா சந்தைக்கு
கொழுந்தி வல்லையா சந்தைக்கு

கடைசியிலே அவள் சந்தைக்குப் போகிறாள். ஆனால் ஒரே சந்தையில் அவளால் நூலை விற்க முடியவில்லை. எத்தனையோ சந்தைகளில் நூலை விற்க முயற்சி செய்கிறாள்.

வெள்ளிக்கிழமைச் சந்தைக்குப் போய்
வேண்டாமென்றார் எந்நூலை
புதன்கிழமைச் சந்தைக்குப் போயும்
போகவில்லை எந்நூலும்
திங்கட்கிழமைச் சந்தைக்குப் போய்
சீந்துவாரில்லை எந்நூலை
ஞாயிற்றுக்கிழமைச் சந்தைக்குப் போய்
நாயுங்கூட கேட்கவில்லை.

இப்படிப் பல சந்தைகளிலே நூலை விற்க முடியாமல் கடைசியிலே அவள் ஆலத்தூர் சந்தைக்குப் போகிறாள். ஆலத்தூர் அவளுடைய தந்தை வாழும் ஊர். அந்தச் சந்தையிலே பழக்கப்பட்ட ஒருவன் அவள் நூலை வாங்கிக் கொள்கிறான். அவள் காசைப் பெற்றுக்கொண்டு கடைக்குப் போகிறாள்.

ஆலத்தூருச் சந்தையாம்
அப்பனூருச் சந்தையாம்
அம்பனூருச் சந்தையிலே
அறிந்த கைக்கோளன் கண்டானும்
அறிந்த கைக்கோளன் கண்டுமே
அஞ்சரைக் காசுக்கு வாங்கினான்
நூலையெல்லாம் போட்டுவிட்டு
காசைத்தானும் வாங்கிக்கிட்டு
காசைத்தானும் வாங்கியதும்
கடைக்குத்தானும் போனாளாம்

எந்தக் கடைக்கு முதலில் போகிறாள்? பெண்களுக்குப் பூவென்றால் மிகுந்த விருப்பமல்லவா? அதனால் முதலில் பூக் கடைக்குப் போகிறாள். என்னென்ன பூ வாங்குகிறாளென்று பாட்டிலே பாருங்கள்.

என்ன கடைக்குப் போனாளாம்
பூக்கடைக்குப் போனாளாம்
வாடாமல்லிகை ஒருகாசு
வட்டமல்லிகை ஒருகாசு
செண்டுமல்லிகை ஒருகாசு
செவந்திப்பூவும் ஒருகாசு
வாசமல்லிகை ஒருகாசு
மருக்கொழுந்தும் ஒருகாசு
எல்லாங்கூடிக் கணக்குப்பார்க்க
ஒருகாசு மிச்சமிருக்குது

பூவெல்லாம் வாங்கிய பிறகும் ஒரு காசு மீதியிருந்ததாம்! அதை எடுத்துக்கொண்டு அவள் பாத்திரக் கடைக்குப் போகிறாள். அங்கே அவள் வாங்கிய பாத்திரங்களுக்குக் கணக்கே இல்லை. இவ்வளவும் அந்த ஒரு காசில் நடக்கிறது! அது மட்டுமல்ல. எல்லாப் பாத்திரங்களும் வாங்கிய பிறகும் அரைக் காசு மீதியிருக்கிறது! இப்படிப்பட்ட காசு நமக்குக் கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

ஒருகாசைக் கொண்டுக்கிட்டு
கன்னுங்கடைக்குப் போனாளாம்
அண்டாப் பானை எடுத்தாளாம்
அடுக்குப் பாத்திரம் எடுத்தாளாம்
குண்டாச்சட்டி எடுத்தாளாம்
குத்துவிளக்கும் எடுத்தாளாம்
சின்னவட்டில் எடுத்தாளாம்
சிப்பிலித்தட்டம் எடுத்தாளாம்
எல்லாங்கூட்டிக் கணக்குப்பார்க்க
அரைக்காசு மிச்ச மிருக்குது

அந்த அரைக் காசை எடுத்துக்கொண்டு அவள் ஆற்றங் கரைக்குப் போகிருள். எதற்காக? மீன் வாங்க. வகை வகையான மீனெல்லாம் வாங்கிக்கொள்கிருள்.

அரைக்காசைக் கொண்டுக்கிட்டு
ஆற்றங் கரைக்குப் போளுளாம்
பேயாமழையும் பெய்ததாம்
பெரியவெள்ளம் வந்ததாம்
ஏருமீனும் ஏறிச்சாம்
அயிரை மீனும் வந்ததாம்
அயிரைமீனு அரைக்காசு
ஆருமீனு அரைக்காசு
கெண்டைமீனுக் காக்காசு
கெளுத்திமீனுக் காக்காசு
குச்சுமீனுக் காக்காசு
குரத்திமீனுக் காக்காசு

இப்படி மீனெல்லாம் வாங்கிக்கொண்டாள். வீட்டுக்குப் புறப்பட்டாள். வழியிலே போகிறவர்களையெல்லாம் தன் கணவனைப்பற்றி விசாரிக்கிருள். தன் கணவனைப்பற்றி விளக்கமும் கொடுக்கிருள்.

மீனைஎல்லாம் வாங்கிக்கிட்டு
வீட்டுக்குத்தான் புறப்பட்டாள்
முன்னுல்போகும் பெண்டுகளே
பின்னுல் தங்கும் பெண்டுகளே
என்புருசன் வல்லரக்கன்
எதிரேவரக் கண்டீரோ

அவிழ்ந்தவேட்டி கட்டாமல்
திறந்தவாயை மூடாமல்
நிழலைக்கண்டால் நிற்காமல்
தண்ணீர்கண்டால் குடியாமல்
மனுசர்கண்டால் பேசாமல்
மாட்டைக்கண்டால் விலகாமல்
என்புருசன் வல்லரக்கன்
எதிரேவரக் கண்டீரோ

கணவனைப்பற்றி விசாரித்துக்கொண்டே வருகிருள். யாரும் அவனைப் பார்த்ததாகக் கூறவில்லை. அதனுல் அவள் வேகமாக வீட்டுக்கு வருகிருள். வந்ததும் அரிவாள் மனையை எடுத்து வைத்து மீனையெல்லாம் கண்டங் கண்டமாக அரிந்து போடுகிருள். பிறகு அடுப்பிலே வைத்து அந்தக் கண்டங் களைப் பக்குவம் செய்கிருள்.

வேகமாக வந்தாளாம்
வீட்டுக்குவந்து சேர்ந்தாளாம்
அரிவாள்மனையை எடுத்தாளாம்
அரிந்தரிந்து போட்டாளாம்
அரிந்தரிந்து போட்டாளாம்
ஐம்பது கண்டம் போட்டாளாம்
நாணிக்கோணிப் பார்த்தாளாம்
நாற்பதுகண்டம் போட்டாளாம்
சாற்றையெல்லாம் கூட்டிக்கிட்டு
அடுப்பிலேதான் வைத்தாளாம்
தீயைநல்லா எரித்தாளாம்
சினுக்குத்தாளம் போட்டாளாம்

பெரியசட்டியில் ஊற்றிக்கிட்டுப்
பெரியதாளம் போட்டாளாம்
சாற்றையெல்லாம் கண்டாளாம்
அகப்பையைத்தான் எடுத்தாளாம்

இன்னும் கணவன் வரவில்லை. அவளுக்கு அவசரம். நாக்கிலே நீர் ஊறுகிறது. அதனால் வீட்டுக் கதவைத் தாள் போட்டுவிட்டுத் தின்ன ஆரம்பித்தாள். மீன் வெந்து விட்டதா என்று பார்ப்பதற்காகக் காரணம் கற்பித்துக் கொண்டு ஒரு கண்டம் தின்றாள். பக்குவம் சரியா இல்லையா என்று ஒரு கண்டம். உப்பிருக்கிறதா என்று பார்க்க ஒன்று. இப்படியாக மீன் எல்லாவற்றையும் அவளே தின்று விடு கிறாள். பிறகு பக்கத்து வீட்டுப் பெண்களோடு வம்பளக்கப் போகிறாள்.

வெந்ததான்னு ஒருகண்டம்
வேகலையென்று ஒருகண்டம்
ஆச்சுதான்னு ஒருகண்டம்
ஆகலையென்று ஒருகண்டம்
உப்புப்பார்க்க ஒருகண்டம்
உரப்புப்பார்க்க ஒருகண்டம்
எல்லாக்கண்டமும் தின்றாளாம்
எதிர்வீட்டுக்குப் போனாளாம்
பக்கத்துவீடு போனாளாம்
பழமைபேசப் போனாளாம்

இந்தச் சமயத்திலே கணவன் வீட்டுக்கு வருகிறான். வந்தவன் சாற்றுச் சட்டியைப் பார்க்கிறான். மீனே அதில் இல்லை. அவனுக்குக் கோபம் வந்துவிடுகிறது. பெண்டாட்டி

யைத் தேடி வந்து அவளை அடிக்கிறான். பக்கத்து வீட்டுக் காரர் சமாதானம் செய்கிறார்கள். இதற்குள்ளே இரவு வெகு நேரம் ஆகிவிடுகிறது. எல்லோருக்கும் உறக்கமும் வந்துவிடுகிறது. அதனால் படுத்துத் தூங்கச் சென்று விடுகிறார்கள்.

புருஷன்வந்து பார்த்தானும்
சாற்றுச்சட்டியைப் பார்த்தானும்
சாற்றுச்சட்டியைப் பார்த்தபோது
சாறுமட்டும் இருந்ததாம்
கண்டம்ஒன்றும் இல்லையாம்
கடுங்கோபம் அங்கேவந்ததாம்
கோபமாகப் போனானும்
குடுமியைப்பிடித்து இழுத்தானும்
நாலுபேரும் பார்க்கப்பார்க்க
நாலுகுத்து வைத்தானும்
பக்கத்தார்கள் குறுக்கே வந்து
பஞ்சாயத்தும் செய்தார்கள்
பஞ்சாயத்து முடிந்ததும்
படுத்துறங்கச் சென்றார்கள்.

ராட்டைப் பாட்டு நீளமான ஒரு நாடோடிப் பாடல் வேடிக்கையானது. இதைப் பாடிக்கொண்டே ஒயில் கும்மி அடிப்பதுண்டு.

# மனோரஞ்சிதம் பாலா

தங்கமே தங்கம் என்று முடிகின்ற நாடோடிப் பாடலைக் கேட்டிருக்கிறோம். ஏதில்லலோ லேலோ என்றும், ஏலேலோ ஐலசா என்றும் முடிகின்ற பாடல்களையும் பார்த்தோம்.

மனோரஞ்சிதம் பாலா என்று முடிகின்ற பாடலும் உண்டு. கவர்ச்சியான இசையுடன் பாடுகின்றபோது இந்தப் பாடல்கள் நம் உள்ளத்தைக் கவர்கின்றன.

வயலிலே நாற்று நடவு நட்டுவிட்டு வீட்டை நோக்கித் திரும்புகிறார்கள் கூலிக்காரர்கள். நாளெல்லாம் வேலை செய்த அலுப்பு. ஆனால், அதை நினைத்துக்கொண்டிருந்தால் முடியுமா? ஊரும் பக்கத்தில் இல்லை. இரண்டு கல் தொலைவு நடக்கவேணும். அங்கே போனதும் அடுப்புப் பற்ற வைக்க வேணும். சோறு சமைக்க வேணும். பசியோடு வந்திருக்கும் கணவனுக்கும் குழந்தைகளுக்கும் சோறு போடணும். ஆகையால் நடவு நட்டுத் திரும்பும் பெண்கள் சலிப்பைப் பாராமல் வேகமாக நடக்க விரும்புகிறார்கள்.

வயலிலே வரப்பு வெட்டிச் சீர்திருத்த வந்திருந்த ஆண்கள் சிலரும் இந்தப் பெண்கள் கூட்டத்தோடு வீடு

திரும்புகிறார்கள். அவர்களில் ஒருத்தன் வேகமாகக் கால் எடுத்து வைக்கக் கூடியவன். அவன் முன்னால் நடக்கிறான். சும்மா நடக்கவில்லை. பாடிக்கொண்டே நடக்கிறான். பாட்டைக் கேட்க வேண்டும் என்ற ஆசையிலே பெண்களும் வேகமாகக் காலெடுத்து வைக்கிறார்கள். சலிப்புப் பறந்து போகிறது. தொலைவும் நெருங்கிவிடுகிறது.

மனோரஞ்சிதம் பாலா என்ற இந்தப் பாடல் செய்கிற அற்புதம் அது. பாடுகிறவன் நடந்துதான் போகிறான். ஆனால், அவன் கோச்சிலே ஒய்யாரமாகப் போவதாகக் கற்பனை செய்துகொண்டு பாடுகிறான்!

நாடு செழித்திடவே மனோரஞ்சிதம் பாலா
நல்லமழை பெய்யவேணும் மனோரஞ்சிதம் பாலா
தேசம் செழித்திடவே மனோரஞ்சிதம் பாலா
செல்ல மழைபெய்யவேணும் மனோரஞ்சிதம் பாலா
கோச்சுமேலே கோச்சுவரும் மனோரஞ்சிதம் பாலா
கோலக்கோச்சு முன்னேவரும் மனோரஞ்சிதம் பாலா
நானும்வரும் கோச்சிலேதான் மனோரஞ்சிதம் பாலா
நாகசுரம் ஊதிவரும் மனோரஞ்சிதம் பாலா
முட்டாக்குப் போட்டவண்டி மனோரஞ்சிதம் பாலா
முகப்புவச்சு காந்தவண்டி மனோரஞ்சிதம் பாலா
காந்தவண்டி போறபோக்கு மனோரஞ்சிதம் பாலா
கண்ணிரண்டும் சோருதடி மனோரஞ்சிதம் பாலா

ஒரே பாட்டிலே வழி தீர்ந்துவிடுமா? இப்படிப் பல பாட்டுக்களைப் பாடுவார்கள். பாட்டுக்கு மத்தியிலே வேடிக்கையாகப் பேச்சும் வரும். ஊர் வம்பும் வரும். சிரிப்பொலியும், கேலியும் கலந்து வரும். கதை சொல்லிக் கொண்டே நடப்பதும் உண்டு,

ஆனால், பாட்டைப்போல மற்றவையெல்லாம் அத்தனை சுவையாக இரா. மறுபடியும் ஏதாவது பாட்டுப் பாடும்படி கேட்பார்கள்.

இந்தத் தடவை அத்தை மகனாகப் பாட்டுக்காரன் வருகிறான். அவன் கோட்டைக்குப் போகிறான்; மதுரைக்குப் போகிறான்; அவனிடத்திலே ஒரு பெண் உரிமையோடு தனக்கு வேண்டியவற்றை வாங்கி வரும்படி சொல்லுகிறாள்.

கோட்டைக்குப் போறவரே—அத்தை மகனே
கொண்டைச் சீப்பு வாங்கிவாங்கோ--அத்தை மகனே
வாங்காமல் வந்துவிட்டால்—அத்தை மகனே
மனசெனக்குக் குளிராது—அத்தை மகனே
மரதைக்குப் போறவரே—அத்தை மகனே
மல்லிகைப்பூ வாங்கிவாங்கோ—அத்தை மகனே
வாங்காமல் வந்துவிட்டால்—அத்தை மகனே
மனசெனக்குக் குளிராது—அத்தை மகனே
பட்டணமே போறவரே—அத்தை மகனே
பட்டுச்சேலை வாங்கி வாங்கோ—அத்தை மகனே
வாங்காமல் வந்துவிட்டால்—அத்தை மகனே
மனசெனக்குக் குளிராது—அத்தை மகனே

# மலைமேலே மஞ்சு

அஞ்சாங்கல் என்ற ஒரு விளையாட்டு உங்களுக்குத் தெரியுமா? ஐந்து சிறு கற்களை வைத்துக்கொண்டு பெண்கள் விளையாடும் விளையாட்டு அது.

ஒரு கல்லை மேலே வீசிவிட்டு மற்ற நான்கு கற்களையும் தரையிலே போடுவார்கள். மேலே வீசிய கல்லைக் கீழே விழாமற் பிடிக்க வேண்டும். பிறகு அந்தக் கல்லை மறுபடியும் மேலே வீசிவிட்டுக் கீழுள்ள கற்களை ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டே வீசிய கல்லையும் பிடிக்க வேண்டும்.

பிறகு இரண்டிரண்டாக, மூன்றும் ஒன்றுமாக, நான்கும் சேர்த்து இவ்வாறு பலவகைகளில் கற்களை எடுத்து அஞ்சாங்கல் ஆட்டம் தொடரும். வீசிய கல்லைப் பிடிப் பதிலோ, கீழே உள்ளவற்றை வரிசைப்படி எடுப்பதிலோ தவறு நேர்ந்தால் ஆட்டம் போய்விடும். பிறகு வேறொருத்தி ஆடுவாள்.

இப்படி ஆடும்போது நிலத்தைக் கையால் தட்டுவதும் நெஞ்சைத் தட்டுவதுமாகப் பலவித ஓசைகள் எழுப்பு

வார்கள். சில சமயங்களிலே ஆட்டத்தோடு பாட்டும் வரும். பாடிக்கொண்டே அஞ்சாங்கல் ஆடுவார்கள். அப்பொழுது பாடும் பாட்டில் ஒன்றை இப்பொழுது பார்க்கலாம்.

மலைமேலே மஞ்சு
மாரியம்மா குண்டம்
சின்னப்பிள்ளை தண்டம்
சிறுமணிக் கொப்பு
அஞ்சுபிள்ளைத் தாய்ச்சி
கஞ்சிக்கு மடியருள்
சம்பா நெல்லுக் காய்ந்து கிடக்குது
கொட்டிக் கொடம்மா கொட்டிக்கொடு.

ஓடி ஓடித் தொடுகின்ற விளையாட்டு ஒன்றும் உண்டு. ஒரு பாட்டை ஒரே மூச்சில் சொல்ல வேண்டும். அப்படிச் சொல்லிக்கொண்டே ஓடி மற்றவர்களில் எத்தனை பேரைத் தொட முடியுமோ அத்தனை பேரையும் தொட வேண்டும். மூச்சை நிறுத்திவிட்டாலோ அல்லது மறுபடியும் மூச்சை உள்ளே இழுக்க ஆரம்பித்தாலோ உடனே நின்றுவிட வேண்டும்.

இப்படி ஒரே மூச்சில் தொடும் விளையாட்டின்போது பாடும் பாட்டுக்கள் சிலவற்றைப் பார்க்கலாம். மூச்சை நன்றாக உள்ளே இழுத்துக்கொண்டு பிறகு பாட்டைத் தொடங்குவார்கள். பாட்டின் கடைசியில் வரும் ஒரு சொல்லையோ சொல் தொடரையோ அந்த மூச்சிருக்கும் வரை திருப்பித் திருப்பிக் கூறிக்கொண்டு மற்றவர்களைத் தொட முயல்வார்கள். பாட்டிலே பொருள் இருக்க வேண்டு மென்பதில்லை.

அத்திப் பட்டை
துத்திப் பட்டை

மாம்பட்டை
மரப்பட்டை
மக்களாடும்
தென்னம்பட்டை
அத்தி கொண்டு
பூசைகொண்டு
கவ்வாளத்தான்
கவுட்டி
காலு மேலே
மண் வெட்டி......மண் வெட்டி

மண்வெட்டி, மண்வெட்டி என்று மூச்சிழுக்கும்வரை சொல்லிக்கொண்டே தொட முயல்வார்கள்.

அடியடி வாழை
ஆலாங் குருத்து
பக்கக் கன்று
படி வாசக்கல்

படிவாசக்கல், படிவாசக்கல் என்று கூறும்போது பாட்டில் பொருள் இல்லையே என்று தோன்றலாம். விளையாட்டுக்கு இந்தப் பாடல் உதவுகிறது. அதற்காகத்தானே இந்தப் பாடல்? பொருளைப்பற்றி விளையாடுகின்ற யாரும் கவலைப்படுகிறதில்லை.

இன்னும் ஒரு பாடலைப் பார்க்கலாம்.

புறாப் புறா முட்டையிட
புறாச் சங்கிலி கட்டியிட,

நானடிக்க நீ யடிக்க
ரத்தங் கட்டிச் சாகடிக்க

சாகடிக்க, சாகடிக்க என்று பல முறை கூறிக்கொண்டு ஓடித் தொட முயலும்போது கொஞ்சம் பயங்கரமாகவே தோன்றும். ஆனால், இந்த விளையாட்டில் அச்சத்திற்கு இடமொன்றுமில்லை.

நெல்லு விளையும் நீலகிரி
நெய்க்கும்பம் சாயும் கள்ளிப்பட்டி
பாக்கு விளையும் பாலக்காடு
பஞ்சம் தெளியும் மஞ்ச வலசு.

மஞ்ச வலசு என்பது ஓர் ஊரின் பெயர். இந்தப் பெயரை விளையாடுபவர்கள் தங்கள் விருப்பம் போல மாற்றிக்கொள்ளுவார்கள். ஒவ்வொருவருக்கும் அவருடைய பிறந்த ஊர்தானே முக்கியமானது? அதனால் நானும் இந்தப் பெயரை மாற்றிக்கொண்டிருக்கிறேன்.

# ஒன்று பத்து நூறு

கிராமத்திலே சிறுவர்கள் விளையாடும்போது, "நான் ஆயிரம் எண்ணுகிறேன்; அதற்குள்ளே உன்னால் பாட்டியைத் தொட்டுவிட்டு வர முடியுமா?" என்று ஒருவன் கேட்பான். விஷயம் தெரியாதவன், "ஓ என்னால் முடியும்" என்று பந்தயம் போடுவான்; ஓடவும் செய்வான். முதலில் இந்த ஓட்டப் பந்தயத்தைப்பற்றிப் பேசியவன், "அடுப்பு, துடுப்பு, ஆயிரம்" என்று முடித்துவிடுவான். திண்ணையிலே உட்கார்ந்திருக்கும் பாட்டியைத் தொட்டுவிட்டு வர ஓடியவன் பாதி தூரம்கூடச் சென்றிருக்கமாட்டான்; அதற்குள்ளே ஆயிரம் என்று சொல்லி முடிந்துவிடும்.

எல்லோரும் சிரிப்பார்கள். ஓடத் தொடங்கியவன் மட்டும் இவ்வாறு ஆயிரம் எண்ணுவதை ஒப்புக்கொள்ள மாட்டான். மற்றவர்கள் இப்படி எண்ணுவது சரி என்று வேடிக்கையாகச் சாதிப்பார்கள். இது ஒரு விளையாட்டு; பந்தயத்தை ஒப்புக்கொண்டு ஓட முயல்கின்றவனை ஏமாற்றுகிற விளையாட்டு.

ஆனால் ஒன்று, இரண்டு, மூன்று என்று வரிசையாக உண்மையிலேயே எண்ணிப் பாடி விளையாடுகிற விளையாட்டுக்களும் உண்டு. கும்மிப் பாட்டு நல்ல உதாரணம்.

கும்மிப் பாடல்கள் ஆயிரக்கணக்கிலே இருக்கின்றன என்பது நமக்குத் தெரியும். அவற்றிலே பல வகைகளும் உண்டு. ஒரு சில கும்மிப் பாடல்கள் இப்படிக் கணக்கெண்ணும் வகையைச் சேர்ந்தவை; பாடுவதற்கும் எளிமையானவை.

ஒரு கல்லை எடுத்து வீசினார்களாம். அது ஆகாயத்தில் கொஞ்ச தூரம் சென்று பிறகு வேகம் குறைந்து சோர்வுற்று நிலத்தில் விழுகிறது. ஓர் ஆயிரம் கிளிகள் அந்தக் கல் வீச்சால் எழுகின்றன; அந்தரத்தில் நின்று பாடுகின்றன. அந்தக் கிளிகள் ஏகாந்தம் பேசுகின்றனவாம்.

பிறகு இரண்டு கல் வீசுகிறார்கள். அப்பொழுது இரண்டாயிரம் கிளிகள் எழுகின்றன. ஆகாயத்தில் நின்று ஏகாந்தம் பேசுகின்றன.

இப்படியே மூன்று கல் வீசும்போதும் நடக்கிறது. நான்கு கல், ஐந்து கல் என்று பாட்டு வரிசையாகத் தொடர்கிறது. இந்தப் பாடலைப் பாடிக்கொண்டு எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் கும்மியடிக்கலாமல்லவா? பாட்டைப் பார்ப்போம்:

ஒரு கல்லு வீசவே ஒரு கல்லும் சோரவே
ஒண்ணா லாயிரம் கிளிகள் வந்து—ஆடவே கிளி பாடவே
ஆடவே கிளி பாடவே அம்பலத்தில் நிற்கவே
அம்பலத்தில் நிற்கும்கிளி ஆகாயம் பறக்கவே
ஆகாயம் பறக்கும் கிளி ஏகாந்தம் பேசவே

ரண்டு கல்லு வீசவே ரண்டு கல்லும் சோரவே
ரண்டாலாயிரம் கிளிகள் வந்து—ஆடவே கிளிபாடவே

ஆடவே கிளி பாடவே அம்பலத்தில் நிற்கவே
அம்பலத்தில் நிற்கும்கிளி ஆகாயம் பறக்கவே

ஆகாயம் பறக்கும் கிளி ஏகாந்தம் பேசவே
மூன்று கல்லு வீசவே மூன்று கல்லும் சோரவே
மூன்று லாயிரம் கிளிகள் வந்து—ஆடவே கிளி பாடவே
ஆடவே கிளி பாடவே அம்பலத்தில் நிற்கவே
அம்பலத்தில் நிற்கும் கிளி ஆகாயம் பறக்கவே
ஆகாயம் பறக்கும்கிளி ஏகாந்தம் பேசவே

இப்படியே பாட்டுத் தொடருகின்றது. பாட்டு ஒரே மாதிரியாக இருந்தாலும் கும்மியடிக்கிற வேகம் அதிகரித்துக் கொண்டே போகும். கிளிகளைப்போல் பறந்து பறந்து கும்மியடிப்பார்கள்.

பனைமரத்திலே ஏறி ஓலை வெட்டுவதும், பனை மட்டையி லிருந்து நார் உரிப்பதும் சுலபமான வேலைகள் அல்ல. அப் படிப்பட்ட வேலை செய்து பலர் வாழ்க்கை நடத்துகிறார்கள். அவர்களைப்பற்றிய கும்மிப் பாட்டும் உண்டு. வேலை செய்து விட்டு இரவிலே நேரங்கழித்து ஒருவன் வீட்டிற்கு வருகிறான். வந்து கதவைத் திறக்கும்படி மனைவியைக் கூப்பிடுகிறான். நேரங்கழித்து வந்தவனோடு அவள் ஊடிக் கதவைத் திறக்கத் தாமதிக்கிறாள். இந்தப் பாடலிலும் ஒன்று, இரண்டு, மூன்று என்ற கணக்கு வருகிறது.

ஒன்னும்பனை ஏறுபனை
ஓலைவெட்டி நார் உரிச்சு
நானும் வந்தேன் பொன்னாச்சி
நடந்தலுத்தேன் பொன்னாச்சி

பொன்னுச்சி கதவுதிற
பொன்மயிலே வீடுதிற—
நானெப்படி நான் திறப்பேன்
நடுச்சாமம் வந்தாலே—

ரண்டாம்பனை ஏறுபனை
ஓலைவெட்டி நார் உரிச்சு
நானும் வந்தேன் பொன்னுச்சி
நடந்தலுத்தேன் பொன்னுச்சி
பொன்னுச்சி கதவு திற
பொன்மயிலே வீடுதிற—
நானெப்படி நான் திறப்பேன்
நடுச்சாமம் வந்தாலே—

மூணும்பனை ஏறுபனை
ஓலைவெட்டி நார் உரிச்சு
நானும் வந்தேன் பொன்னுச்சி
நடந்தலுத்தேன் பொன்னுச்சி
பொன்னுச்சி கதவு திற
பொன்மயிலே வீடுதிற—
நானெப்படி நான் திறப்பேன்
நடுச்சாமம் வந்தாலே—

இந்தக் கணக்கு ஒரு கப்பல் பாட்டிலும் வருகிறது. கிளியாக இருந்தால் என்ன, கப்பலாக இருந்தால் என்ன? பாட்டின் இசையும் அதன் கற்பனையுந்தான் முக்கியம்.

ஒரு கப்பல் ஓடிவர—ஜலலோ
ஓடிவர—ஜலலோ
ஓடிவர—சொல்லம்மா சொல்லு
ஒத்தக் கப்பல்—ஏலேலோ
துறைமறிக்க—ஜலலோ
துறைமறிக்க—சொல்லம்மா சொல்லு

ரண்டு கப்பல் ஓடிவர—ஜலலோ
ஓடிவர—ஜலலோ
ஓடிவர—சொல்லம்மா சொல்லு
ரட்டைக் கப்பல்—ஏலேலோ
துறைமறிக்க—ஜலலோ
துறைமறிக்க—சொல்லம்மா சொல்லு

மூன்று கப்பல் ஓடிவர—ஜலலோ
ஓடிவர—ஜலலோ
ஓடிவர—சொல்லம்மா சொல்லு
மூன்று கப்பல்—ஏலேலோ
துறை மறிக்க—ஜலலோ
துறை மறிக்க—சொல்லம்மா சொல்லு

# பொங்கலோ பொங்கல்

பொங்கல் என்றால் முக்கியமாக விவசாயிகளுக்கு ஒரே கொண்டாட்டம். பண்ணையிலே அநேகமாக வேலையெல்லாம் முடிந்துவிடுகிறது. அரும் பாடுபட்டு உழுது விளைத்த தானியங்களெல்லாம் வீடு வந்து சேர்ந்தன. இனி அத்தனை வேலை இல்லை. மாடுகளுக்கும் ஓய்வு கிடைக்கிறது. உழவனும் கொஞ்சம் இளைப்பாறலாம். தை பிறக்கப் போகிறது. இனிக் கொண்டாட்டம்தானே?

பொங்கலுக்கு வேண்டிய முன்னேற்பாடுகளெல்லாம் ஒரு மாதமாகவே நடைபெற்று வருகின்றன. எந்தப் பட்டியைப் பார்த்தாலும் புதுமை பொங்குகிறது. எட்டு மைல் பத்து மைல் சென்று உழவர்கள் மூங்கில் வெட்டி வருகிறார்கள். புதிய பட்டிப் படல்கள் முடைவதும், பழைய படல்களைச் செப்பம் செய்வதும் ஒவ்வொரு பண்ணையிலும் ஒரு மாதமாகக் காணும் காட்சியாகும். மாடு மேய்க்கும் பையன்கள் புல்லாங்குழல் ஊதித் தங்கள் இசைக்கலையின் ஒத்திகை நடத்துகிறார்கள். பட்டிப் பொங்கலன்று யார் யார் பட்டினி இருந்து விரதம் காத்துப் பட்டி ஆவுடை

யாரைத் தொழுது வணங்குவதென்றெல்லாம் வெகு நாட்களுக்கு முன்பே தீர்மானமாகிவிட்டது. பொங்கல் மங்கல நாளை எதிர்பார்த்து எல்லோருடைய உள்ளத்திலும் ஒரே இன்பக் கிளர்ச்சி.

பட்டி ஆவுடையாருக்குப் பொங்கல் வைத்து இரவு எட்டு மணிக்குத் துவரைமார் கொழுந்து விட்டெரியும் வெளிச்சத்திலே பட்டிக்குள்ளே ஆடு மாடுகளின் மேற்பார்வையிலே அவைகள் படுத்துறங்கும் அந்தப் புனித மண்ணிலே இலை போட்டுப் பொங்கல விருந்து நடக்கும்.

முதலிலே பட்டி ஆவுடையார்க்குத்தான் விருந்து. அவர்தானே உழவர்களுக்கு உயிர் கொடுப்பவர்? அதனால் அவருக்கு முதல் மரியாதை செய்துவிட்டுத்தான் விருந்துண்பார்கள்.

'கைகழுவு பட்டியாரே கைகழுவு' என்று சொல்லிக்கொண்டே மாட்டுக்காரன் ஒரு செம்பில் தண்ணீர் எடுத்துப் பட்டியைச் சுற்றி ஊற்றிச் செல்வான்.

'அசனம் பட்டியாரே அசனம்' என்று மற்றொருவன் கூறிக்கொண்டே அமுது படைப்பான்.

'உண்ணுண்ணு பட்டியாரே, உண்ணுண்ணு' என்று மற்றொருவன் உபசாரம் செய்வான்.

'வாய் கழுவு பட்டியாரே வாய்கழுவு' என்று கடைசியில் ஒருவன் சொல்லிச் செல்லுவான். இப்படியாகப் பட்டி ஆவுடையாருக்கு முதலில் உபசாரம் செய்துவிட்டுப் பிறகு விருந்து நடக்கும். பட்டி என்ற சொல்லுக்குப் பொருள் சிலருக்கு விளங்காதிருக்கலாம். மூங்கிலால் வேய்ந்த படல்களைச் சதுரமாக வைத்து அதற்குள் ஆடு மாடுகளை அடைப்பார்கள். அதுதான் பட்டி.

அன்று இரவு எத்தனையோ விளையாட்டுக்கள்; ஒயில் கும்மி இல்லாத பொங்கல் பொங்கலே அல்ல.

அந்த ஒயில் கும்மிப் பாட்டிலேதான் எத்தனை சுவை! வள்ளி பரண்மீதிருந்து தினைப்புனம் காவல் செய்கிறபோது கிளி கடியும் பாட்டொன்று பாடுகிருள். அந்தப் பாட்டு ஆங்கிலேயர்களை நாட்டைவிட்டுப் போகும்படி கூறும் கிலேடைப் பாட்டாக அமைந்திருக்கிறது. பாரத நாடு சுதந்திரமடையாத அந்தக் காலத்தில் பாடியது அப்பாட்டு.

இந்து சகோதரரே
இங்கிலாந்துப் பட்சிகளே
தந்திரங்கள் செல்லாது போ—
ஆலோலங்கிளிசோ—உங்கள்
மந்திரங்கள் செல்லாது போ—
ஆலோலங்கிளிசோ
வெள்ளை வெள்ளைக் கொக்குகளா
மிரண்டோடும் பட்சிகளா
தந்திரங்கள் செல்லாது போ—
ஆலோலங்கிளிசோ—உங்கள்
சொந்தவீடு ஏகிடுவீர்—
ஆலோலங்கிளிசோ
காடைகவு தாரிகளா
கரிக்குரிவிப் பேடுகளா
தந்திரங்கள் செல்லாது போ—
ஆலோலங்கிளிசோ—உங்கள்
சொந்த நாடு ஏகிடுவீர்—
ஆலோலங்கிளிசோ

இப்படிப் பாட்டுக்களைப் பாடிக்கொண்டே ஒயிலாக ஆடுவார்கள்.

ராட்டைப் பாட்டு என்று ஒரு நாட்டுப் பாடல் இருக்கிறது. அதன் ஹாஸ்யச் சுவையே அலாதியானது. அதைக் கேட்டுச் சிரிக்காதவர்கள் கிடையாது. அந்தப் பாடலுக்கும் ஒயில் ஆட்டம் நடக்கும்.

மாட்டுப் பொங்கலுக்கு அடுத்த நாள் சிறுமிகளுக்குத் தனிப்பட்ட கொண்டாட்டம். அன்று அவர்கள் மார்கழி மாதமெல்லாம் பிடித்து வைத்த பிள்ளையாரைக் கொண்டு போய் ஆற்றிலே விடுவார்கள். ஊரெல்லாம் அவர்களுடைய கும்மியும் கோலாகலமுமாக இருக்கும்.

அன்று சாதாரணமாக ஆடவர்களெல்லோரும் மாலை கோயிலுக்குச் செல்வது வழக்கம். மாலை கோயிலுக்கு மூங்கிற் குழாயிலே பால் எடுத்துச் சென்று இறைவனுக்கு அபிஷேகம் செய்யவேண்டும். மாலை கோயிலிலேயும் ஒரு பெரிய திருவிழாத்தான். அங்கேயும் ஒயில் கும்மியாட்டம் பார்க்கலாம். மாட்டுப் பொங்கலன்று பிறந்த காளைக் கன்றுகளை உழவர்கள் கடவுளுக்கென்று யதேச்சையாக விட்டுவிடுவார்கள். அதற்கு ஒரு வேலையும் இல்லை. நன்றாகத் தின்று கொழுத்திருக்கும். அதற்குச் சலகைக் காளை என்று பெயர். அதைக் கொண்டுவந்து மாலை கோயிலிலே ஆட்டம் பழக்குவார்கள். பறை மேளத்திற்குத் தக்கவாறு அது காலெடுத்து வைக்க வேண்டும். பார்க்கிறதற்கே பயத்தை உண்டாக்கும் அக்காளை வாத்தியங்களின் ஓசையாலும், ஜனத் திரளின் புதுமையாலும் மிரண்டு மிரண்டு துள்ளிக் குதிக்கும்.

இப்படியாகப் பொங்கல் என்றால் ஒரே குதூகலம். பட்டணங்களிலே வசிக்கும் மக்களுக்கு இந்தக் குதூகலம் புரியாது. கிராமத்திற்குச் சென்று அந்த மக்களோடுகூட

இருந்து பார்த்தால்தான் பொங்கல் விழாவில் அவர்கள் அனுபவிக்கும் இன்பத்தை அறிந்துகொள்ள முடியும். பட்டி தான் உழவர்களுக்கு உயிர் கொடுப்பது. அதனுல் அதற்கு வைக்கும் பொங்கலே அவர்களுக்கு உயர்ந்த விழா.

பொங்கலோ பொங்கல்!
பட்டிப் பொங்கல் பால் பொங்கல்
பொங்கலோ பொங்கல்!

# ஒயில் கும்மி

உழவர்கள் வாழும் கொங்கு நாட்டு ஊர்களிலே நடைபெறும் பொங்கல் விழாவிலே ஒயில் கும்மி ஒரு சிறப்பான இடம் பெறுகிறது. ஒயில் என்றால் அழகு என்று பொருள். பலவகையான சந்தங்களுக்கு ஏற்றவாறு ஒயிலாக ஆடிக் கும்மி அடிப்பதால் இதற்கு ஒயில் கும்மி என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.

சாதாரணமாகப் பெண்கள்தான் கும்மியடிப்பார்கள். கும்மி அவர்களுக்காகவே ஏற்பட்டது என்றுகூடக் கூறலாம். ஆனால், ஒயில் கும்மி பெண்கள் அடிப்பதல்ல. ஆடவர்கள் ஆடிப்பாடி நடிக்கும் ஆட்டம் அது.

எதிர் எதிராக இரண்டு வரிசைகளில் இளங்காளைகள் நின்றுகொள்ளுவார்கள். வரிசைக்குச் சுமார் பத்து அல்லது பன்னிரண்டு பேர் இருப்பார்கள். அவர்கள் தலையிலே நல்ல குஞ்சம் விட்டு அழகாகக் கட்டிய உருமாலைகள் விளங்கும். கையிலே ஒரு சிறிய கைக்குட்டையும் இருக்கும். கைக்குட்டைகளை லாகவமாக வீசிக்கொண்டு அந்தக் காளைகள் பாட்டின் சந்தத்திற்கேற்றவாறு ஆடுவார்கள். பரதநாட்

டியத்திலுள்ள அசைவுகள் பலவற்றை இந்த ஆட்டத்திலே பார்க்கலாம். மிகவும் சிரமமான கரடி வித்தையையும் காணலாம்.

வள்ளியம்மன் ஒயில் கும்மிதான் எல்லோரும் விரும்பும் ஆட்டம். சிறுத்தொண்டன் ஒயில் கும்மி போன்ற மற்ற கும்மிகளும் உண்டு என்றாலும், வள்ளியின் அன்பைப் பரிசோதித்து முருகன் அவளை ஏற்றுக்கொள்ளும் கதைதான் மாறாத இன்பத்தை அளிக்கிறது. இரவு முழுவதும் ஒயில் கும்மி நடைபெறும். எல்லோருக்கும் தெரிந்த கதைதான். இருந்தாலும் வள்ளி கதையைக் கேட்பதில் மக்கள் சலிப்படைவதில்லை.

ஒயில் கும்மி அடிக்கும் கோஷ்டிக்கு வழக்கமாக ஓர் ஆசிரியர் இருப்பார். அவர்தான் ஆட்ட வகைகளைக் கற்றுக் கொடுப்பவர். அவர் முதலில் பாட்டைத் தொடங்குவார். பிறகு மற்றவர்கள் பாடிக்கொண்டு ஆடுவார்கள். சுமார் பத்து நிமிஷங்களுக்கு ஒரு முறை பாட்டின் சந்தமும் இசையும் மாறும். அவற்றிற்கேற்றவாறு ஆட்டமும் மாறும்.

பிள்ளையார் வணக்கம் இல்லாமல் கதை தொடங்காது. ஒயில் கும்மியும் பிள்ளையாருக்கு ஒரு ஒயிலான ஆட்டத்தைக் கொண்டிருக்கும். அது கொஞ்சம் வேகமான ஆட்டம். அதற்கான பாட்டைப் பார்க்கலாம்:

அரசரடியில் வீற்றிருக்கும் ஆனைமுகவோனே
அதிரசமும் சர்க்கரையும் இங்கு வைக்கிறோமே
முக்கண்ணன் பெற்றெடுத்த மூஷிக வாகனனே
மோர்க்குழம்பு அப்பளமும் முன்பு வைக்கிறோமே
சொல்லுமிந்தக் கும்மிதனில் சொல்குற்றமிருந்தால்
சுப்ரமண்யர் கதையெனவே சீரியர்கள் பொறுப்பார்
ஆதிதாளத்துடனே ஆரபியும் சொன்னேன்
ஆடிவந்து கையமர்ந்து அசைந்து மெள்ள நில்லும்

இப்படிப் பிள்ளையார் வணக்கம் கூறிவிட்டுக் கதை தொடங்கும். வள்ளியம்மை ஒயில் கும்மி ஒரு நீளமான நாடோடிப் பாடல். முழுவதையும் இங்கே தர முடியாது. ஒன்றிரண்டு பகுதிகளை மட்டும் இங்கு மாதிரிக்குக் கொடுக்கிறேன்.

ஒரு பகுதியிலே ஒரு சோலையின் வருணனை வருகின்றது. அந்தப் பாடலைப் பாடியாடும்போது அந்தச் சோலையே பூத்துக் குலுங்குவது போலத் தோன்றும். இதோ அந்தப் பாட்டைப் பாருங்கள்:

சோலை சிங்காரம் சொல்ல வெகு கெம்பீரம்
சீருலாவும் பொய்கை ஓரம் சேருமானநேகம்
(சோ)

நல்லரளி மல்லிகைப்பூ முல்லையுடன் சாதியே
செல்வமரிக் கொளுந்து செவந்திப்பூவும்சேருமே
(சோ)

பச்சைசா மந்தியும் பனிக்கு வெட்டி வேருமே
செச்சை நந்தியாவட்டைசெண்பகப்பூச்சேருமே
(சோ)

வண்டினம் புரண்டு மதுவுண்டு பாடும் காந்தாரம்
கொண்ட செவிக்கானந்தம் குயில் குருவி
சஞ்சாரம் (சோ)

'சோலை சிங்காரம் சொல்ல வெகு கெம்பீரம்' என்ற அடியை மட்டும் ஆடுபவர்கள் பாடிக்கொண்டே ஆடுவார்கள்,

நாரதர் இல்லாவிட்டால் கதை இனிக்காது. அவருடைய 'கலகம்' இருக்க வேண்டும். அது கலகமானாலும் கடைசியிலே எல்லாம் மங்களமாக முடிவதற்கு உதவுகிறது.

வள்ளியம்மை ஒயில் கும்மியிலேயும் நாரதர் வருகிறார். அவர்தான் வள்ளியைப்பற்றி முருகனுக்குச் சொல்லி அவரைக் கானகத்துக்கு அழைத்து வருகிறார். அவர் வழி காட்ட வேலன் வருகின்ற விதத்தை ஒயில் பாட்டுக் கூறுகிறது.

வில்லெடுத்து அம்பு தொடுத்து—தகதத்தம்
வேலர் புனம் பார்க்கவே
கன்னி வள்ளி தன்னைக்காண—தகதத்தம்
கந்தர் வனம் தேடிவருகிறார்
தூரவோ வழி கிட்டவோ—தகதத்தம்
சொல்லு மென்று வேலர் கேட்க
ரண்டுநா ழிகைக்குள் வழி—தகதத்தம்
இக்கணமே காண வைப்பேன்
இப்படி நாரதர் கந்தர்—தகதத்தம்
இருவர் தேடி வருகையிலே
ஆலோலம் ஆலோலம்—தகதத்தம்
அதனைக் கந்தர் காதில் கேட்டார்
தகதத்தம் தகதத்தம் தகதத்தம்

ஆடுபவர்கள் தகதத்தம், தகதத்தம் என்று கூறிக் கொண்டே ஆடுவார்கள். கடைசியிலே இப்படிக் கூறும் வேகம் அதிகரித்துக்கொண்டே போகும். வள்ளியைக் காண முருகன் அத்தனை வேகத்தோடு போகிறாரோ என்றுகூட நினைக்கத் தோன்றும்,

# மீனாட்சி துணை

குழந்தையிடத்திலே தாய்க்கு எத்தனை அன்பிருக்கிறது! அந்தத் தாயின் அன்பை அளவிட முடியுமா? 'பெற்ற மனம் பித்து; பிள்ளை மனம் கல்லு' என்பார்கள். ஆனால் எல்லாப் பிள்ளைகளும் கல்மனம் படைத்தவர்களாக இருப்பதில்லை. தாயின் அன்பை அறிந்து அதிலே கட்டுண்டு வாழ்க்கை நடத்தியவர்கள் பலபேர் உண்டு

எல்லாவற்றையும் துறந்த ஞானிகள்கூட தாயின் அன்பால் கவரப்பட்டிருக்கிறார்கள். பட்டினத்தடிகளின் துறவு ஆச்சரியமானது. அவரும் தாயின் அன்பிலே வசப்பட்டு நின்றதை நாம் அறிந்திருக்கிறோம்.

அந்தத் தாய் தன் குழந்தையைப்பற்றி ஆயிரம் ஆயிரம் கனவுகள் காண்கிறாள். அதன் இன்பத்திலும், சுகத்திலும், நன்மையிலும் தாய்க்கு அளவு கடந்த ஆர்வம்.

ஒரு தாய் தன் குழந்தையைத் தொட்டிலில் வைத்துத் தாலாட்டுகிறாள். தாலாட்டுப் பாட்டும் பாடுகிறாள். அவளுடைய பாட்டிலே அவளுடைய ஆசைகளெல்லாம் வெளி

யாகின்றன. குழந்தைக்கு ராமன், லக்ஷ்மணன், சீதை ஆகியோரின் உதவி இருக்க வேண்டுமாம். மீனாட்சி அம்மனின் துணை வேண்டுமாம். அப்படித் தாய் ஆசைப்படுகிறாள். அவள் தன் குழந்தையின் மேலுள்ள அன்பால் என்னவெல்லாமோ சொல்லுகிறாள். அவளுக்கு அந்தக் குழந்தைதான் எல்லோரையும் விடப் பெரிய தெய்வம். பாட்டைப் பார்க்கலாம்:

ஆரா ரோ ஆராரோ ஆராரோ ஆராரோ
ஆராரோ ஆராரோ ஆராரோ ஆரிரரோ
ராமர் பசுவடைக்க—என் கண்ணே உனக்கு
லட்சுமணர் பால் கறக்க
சீதையம்மாள் எழுந்துவந்து—என் கண்ணே உனக்கு
சீக்கிரமாய்ப் பால்காய்ச்சி
பால்காய்ச்சிப் பால்வார்த்து—என் கண்ணே உனக்கு
பசுந்தொட்டில் வைத்தாட்ட
தொட்டிலுக்கும் கீழாக—என் கண்ணே உனக்கு
துணையிருப்பாள் மீனாட்சி

இப்படி வளர்க்கின்ற குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்கிறது. பையன் தாயின் மடியைவிட்டுத் தானாகவே வீதியிலும் கழனிகளிலும் ஓடியாடித் திரியும் பருவத்தை அடைந்துவிடுகிறான்.

அப்படி அவன் வளர்ச்சியுற்றதில் தாய்க்கு அளவில்லாத மகிழ்ச்சிதான். இருந்தாலும் ஓடியாடித் திரிகின்ற பருவத்திலே ஏதாவது தீங்கு ஏற்பட்டுவிடக் கூடாதே என்று தாயுள்ளம் கவலைப்படுகிறது. 'இளங்கன்று பயமறியாது' என்பது போலப் பையன் துடுக்குத்தனமாக எங்கும் போக முயல்வான். சில சமயங்களிலே பாம்பிருக்கும்; அல்லது வேறு ஆபத்து இருக்கும். அப்படிப்பட்ட இடங்களுக்குப் போக வேண்டாமென்று தாய் அன்போடு எச்சரிக்கை செய்

கிறுள். அதைக் கூறும் நாடோடிப் பாடலிலே தாயின் அன்புள்ளம் இனிமையான இசையிலே வெளியாவதைக் காணலாம்.

மலையோரம்—மகனே
போகாதேடா
மலை நாகம்—மகனே
தீண்டிடுமே
செடியோரம்—மகனே
போகாதேடா
செடி நாகம்—மகனே
தீண்டிடுமே
கல்லோரம்—மகனே
போகாதேடா
கல் நாகம்—மகனே
தீண்டிடுமே
புத்தோரம்—மகனே
போகாதேடா
புத்து நாகம்—மகனே
தீண்டிடுமே

# தந்தனத்தான்

வேலை ஒன்றும் செய்யாமல் குறும்பு மட்டும் செய்து கொண்டு திரிகிறவர்கள் சில பேர் உண்டு. அவர்களுக்கு மரியாதை இராது. 'உதவாக்கறைகள்' என்ற பட்டம் வேண்டுமானால் கிடைக்கும்.

சும்மா திரிகிறவனுடைய வாய் சும்மா இராது. ஏதாவது ஒரு தெம்மாங்குப் பாட்டை முணுமுணுக்கும். அவனைப் பற்றித் தந்தனப் பாட்டுக்காரன் என்று கூறுவார்கள். அவனுக்கே தந்தனத்தான் என்ற பேரும் ஏற்பட்டுவிடும்.

"அவனா? அவன் ஒரு தந்தனத்தான்" என்று கூறு வார்கள். அவன் வாழ்க்கையை வீணாக்குகிறவன் என்பது கருத்து.

இந்தத் தந்தனத்தானுடைய ஆடம்பரத்துக்கு மட்டும் ஒரு குறையும் இராது. அவனைப்பற்றி ஒரு நாடோடிப் பாடல் உண்டு:

எல்லாரும் கட்டும் வேட்டி
ஏளக்கேத்த சாயவேட்டி
தந்தனத்தான் கட்டும் வேட்டி
சரியான சரிகை வேட்டி

எல்லோரும் போடும் சட்டை
ஏளக்கேத்த நாட்டுச் சட்டை
தந்தனத்தான் போடும் சட்டை
சரியான பட்டுச் சட்டை

எல்லோரும் கட்டும் பொண்ணு
ஏளக்கேத்த கருத்த பொண்ணு
தந்தனத்தான் கட்டும் பொண்ணு
சரியான செவத்த பொண்ணு

நாகரிகமாய் எல்லா நலன்களுடனும் வாழவேண்டும் என்ற ஆசையிருக்கிறது. ஆனால் ஆசை மட்டும் இருந்தால் போதுமா? அதற்கேற்ற முயற்சியும் வேண்டும். முயற்சி இல்லாத ஆசை வாழ்க்கையில் ஏமாற்றத்தையே அளிக்கும். சமூகத்திற்கு விரோதமான செயல்களிலே உள்ளத்தைத் தூண்டும்.

முயற்சியும் உழைப்பும் இல்லாமலேயே செல்வமும் சுகமும் கிடைக்க வேண்டும் என்கிற ஆசை பலருக்குண்டு. அதனால் அவனுக்கும் துன்பம்; சமூகத்திற்கும் தீங்கு விளைகிறது.

'தேவைகளைக் குறைத்துக்கொள்; பிறருக்காக வாழ்' என்று ஆன்றோர்கள் உபதேசம் செய்திருக்கிறார்கள். இந்த உபதேசத்தைப் பின்பற்றுகிறபோது சமூகம் இன்பத்தில் ஓங்குகிறது. தனி மனிதனும் தன் வாழ்க்கையில் சாந்தி யடைகிறான்.

இதை மறந்த காலத்திலே பலவித இன்னல்கள் ஏற்படுகின்றன.

தந்தனத்தான் இதற்கு ஒரு நல்ல உதாரணம். அவன் புல்லுருவியாகப் பிறருடைய உழைப்பைப் பயன் படுத்திக் கொண்டு சுகமடைய எத்தனிக்கிறான். அந்த எத்தனம் நிச்சயமாக வெற்றி பெறாது. சிறிது காலத்திற்கு இன்பமளிப்பதுபோல் தோன்றினாலும் முடிவில் மாறாத ஏமாற்றத்தையே அளிக்கும்.

# கணக்கு மாமனார்

வேலை ஒன்றும் செய்யாமல் பிறருடைய உழைப்பைக் கொண்டே சுகமாக வாழும் பண்ணைக்காரர்களும் உண்டு. அவர்களைக் 'கொடுத்து வைத்தவர்கள்' என்று கிராமத்திலே சொல்லுவார்கள். "உட்கார்ந்த இடத்திலேயே அவர்களுக்கு எல்லாம் கிடைக்கிறது. அவர்கள் எதற்கு வேலை செய்யவேண்டும்?" என்றும் பேசுவார்கள்.

இப்படிச் சுகமாக இருக்கின்ற பேர்வழிகளில் சிலர் பெரிய உலுத்தர்களாக இருப்பார்கள். தங்கள் குடும்பத்திற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொள்ளுவதிலும் அவர்களுக்கு விருப்பம் இராது.

மாமனார் உலோபியாக இருந்துவிட்டால் அவர் கையை எதிர்பார்த்து வாழும் மருமகள் பாடு திண்டாட்டந்தான். பிரிவினை இல்லாத குடும்பத்திலே மருமகள் இவ்வாறு அல்லல் படுவதுண்டு.

மகன் தந்தையின் பேச்சை மீறி நடக்கமாட்டான். சர்வாதிகாரமும் தந்தையிடத்திலே இருக்கும். பெட்டிச்

சாவியும் அவரிடத்திலேதான். அவர் கணக்குப் பார்த்துக் கொடுக்கிறவர்.

மாமியாருடைய கொடுமைக்கு ஆளாகி நடக்கும் மருமகளுக்கு இப்படிக் கணக்குப் பார்க்கிற மாமனூரும் வாய்த்து விட்டால் அவள் வாழ்க்கை பெருந் துன்பமாக முடியும். நாடோடிப் பாடல் ஒன்று இதை நன்றாக விவரிக்கிறது.

மேற்கே மழை பேய மேல் கிணறு தண்ணீர் வர
கொக்கு வடம்பிடிக்கக் கோழிக்குஞ்சு தண்ணீர் கட்ட
சுள்ளெறும்பு பாத்திகட்டச் சோலைக்குயில் நாற்றுநட
காக்காய் கருதுவெட்டக் கட்டெறும்பு தாம்படிக்க
மச்சான் படியளக்க மாமனூர் கணக்குப் பார்க்க
மூளிப்பையன் வாசலிலே முள்ளு முள்ளாய்க் குத்துதே

# சீதனம்

ஒரு வேடிக்கையான சம்பவம் எனக்கு நினைவுக்கு வருகிறது. உழவர்களான அண்ணனும் தம்பியும் அந்தச் சம்பவத்திற்குப் பாத்திரமாக இருந்தார்கள்.

தம்பி காலை நொண்டி நொண்டி ஒரு மாலை நேரத்திலே வீட்டுக்கு வந்தான். உண்மையில் அவன் காலில் ஒரு தொந்தரவும் இல்லை. வேண்டுமென்று அவன் அப்படிப் பாசாங்கு செய்து நடிக்கிறான். வீட்டிலே அவனை அவன் மனைவி எதிர்பார்த்திருந்தாள். திண்ணையிலே அண்ணன் அமர்ந்திருந்தான். அண்ணி பக்கத்திலே நின்றாள்.

அவர்களைப் பார்த்ததும் தம்பி மேலும் அதிகமாக நொண்ட ஆரம்பித்தான். ''தம்பீ, ஏன் இப்படி நொண்டுகிறாய்? காலிலே என்ன?'' என்று அண்ணன் பரிவோடு கேட்டான்.

''அண்ணா, எனக்கு என் மாமனார் வீட்டிலிருந்து வந்ததே சிர்க்கடாரி, அது பால் கறக்கும்போது உதைத்துவிட்டது'' என்று சொல்லிக்கொண்டு தம்பி உட்கார்ந்தான்.

அண்ணனுக்கு விஷயம் விளங்கிவிட்டது. சீர்க்கடாரி இன்னும் வரவில்லை என்பதை அவன் இப்படிக் கிண்டலாகச் சுட்டிக் காண்பிக்கிறான் என்பது அங்கிருந்த எல்லோருக்கும் தெரியாமலா போகும்?

அண்ணன் இந்தக் கிண்டல் வார்த்தைக்குத் தன் பங்கையும் செலுத்த நினைத்தான். அவனுக்குத் தன் மாமனார் வீட்டிலிருந்து சீதனமாகப் பஞ்சு மெத்தை வர வில்லையாம். அதைத் தன் மனைவிக்குச் சுட்டிக்காட்ட எண்ணி, "தம்பி, கால் வலியோடு கீழே உட்காராதே. உன் அண்ணி சீதனமாகக் கொண்டு வந்திருக்கும் பஞ்சு மெத்தை யிலே படுத்துக்கொள்" என்றான் அவன்.

பெண்கள் இரண்டு பேரும் உள்ளம் வெதும்பினார்கள். அப்படி அவர்கள் துன்பப்பட வேண்டும் என்பதற்காகவே அண்ணனும் தம்பியும் பேசினார்கள்.

சீர்வரிசைகள் சரியானபடி உரிய காலத்தில் கொடுக்கா விட்டால் எத்தனையோ விபரீதங்கள் ஏற்படுவதுண்டு.

கையில் பொருளிருப்பவர்களுக்கு இந்தத் துன்பம் இல்லை. தாராளமாக அவர்கள் சீதனம் கொடுக்க முடியும். அப்படிக் கொடுக்கக்கூடிய நிலையில் உள்ள ஒருவனைப்பற்றி ஒரு நாடோடிப் பாடல் வருணிக்கிறது. அவன் தந்த சீதனத் தைப் பாட்டிலேயே பாருங்கள்:

என்னென்ன வித்துவகை கொண்டுவந்தான்பள்ளனவன்
முத்துச்சம்பா, மிளகுசம்பா, அன்னச்சம்பா, அழகுசம்பா
ஆயிரம் தானியங்கள் கொண்டுவந்தான் பள்ளனவன்
வெள்ளைக்குதிரை யுடன் விருதுகொண்டு வந்தானவன்
வெண்சாமரை யதுவும் கொண்டுவந்தான் பள்ளனவன்
செவ்விளநீர் தான் குடிக்க தென்னந்தோப்பு சீதனம்

நல்ல நல்ல பழம்பறிக்க மாந்தோப்பு சீதனம்
இத்தனையும் கொண்டுவந்தான் தேவேந்திர பள்ளனவன்
கோவிலுக்கு ஏற்ற நல்ல கொய்யாக்கனிகொண்டு
வந்தான்
சன்னதிக்கு ஏற்றநல்ல தார்வாழை கொண்டுவந்தான்
மாப்பிள்ளைக்கு ஏற்றநல்ல மணவரையும் கொண்டு
வந்தான்
இத்தனையும் கொண்டுவந்தான் தேவேந்திரப்
பள்ளனவன்

# ஆமடி தங்கம்

காட்டிலே தினை விதைத்துப் பயிர் செய்வதென்றால் எளிதிலே முடிகிறதா? மலைக்காடுகள் பண்படாத நிலையில் இருக்கும். கள்ளியும் கற்றாழையும் வளர்ந்து புதராகக் கிடக்கும். அவற்றையெல்லாம் வெட்ட வேண்டும். முள் பெருக்கி நிலத்தைத் துப்புரவு செய்ய வேண்டும்.

இப்படியெல்லாம் செய்து விதைத்தாலும் கதிர் முற்றத் தொடங்குகிற காலத்திலே வெகு எச்சரிக்கையாகக் காவல் புரியவேண்டும். கிளி ஓட்ட வேண்டும். இல்லாவிட்டால் அத்தனை சிரமமும் வீணாகிவிடும். தினை விளைந்தாலும் வீடு வந்து சேரவேண்டுமல்லவா?

தினை விளைவிப்பதில் உள்ள சிரமத்தைக் கூறுவதிலிருந்தே உழவுத் தொழிலில் உள்ள சிரமத்தையெல்லாம் அறிந்து கொள்ளலாம். 'என்றும் உழவே இனிது' என்பது உண்மையான வாசகந்தான். உழவுத் தொழில் இனிது என்றாலும் எளிது அன்று. தினை விதைப்பைப் பற்றிய பாடலை இப் பொழுது பார்ப்போம்:

கள்ளி வெட்டி—ஏலேலோ
முள் பெருக்கி—ஆமடி தங்கம்
முள் பெருக்கி—சொல்லடி மயிலே

கள்ளி வெட்டும்—ஏலேலோ
குழிதனிலே—ஆமடி தங்கம்
குழிதனிலே—சொல்லடி மயிலே

மான் வந்து ஏலேலோ
ஈனிடவே—ஆமடி தங்கம்
ஈனிடவே—சொல்லடி—மயிலே

மானை நல்ல—ஏலேலோ
வலத்தில் கட்டி—ஆமடி தங்கம்
வலத்தில் கட்டி—சொல்லடி மயிலே

மனித ரிஷபம்—ஏலேலோ
இடத்தில் கட்டி—ஆமடி தங்கம்
இடத்தில் கட்டி—சொல்லடி மயிலே

என்ன தினை—ஏலேலோ
விதைப்ப மென்று—ஆமடி தங்கம்
விதைப்ப மென்று—சொல்லடி மயிலே

கருந்தினையும்—ஏலேலோ
செந்தினையும்—ஆமடி தங்கம்
செந்தினையும்—சொல்லடி மயிலே

ஒன்றாவது—ஏலேலோ
மாதத்திலே—ஆமடி தங்கம்
மாதத்திலே—சொல்லடி மயிலே

ஒரு சுருளாம்—ஏலேலோ
தினைப்பயிரும்—ஆமடி தங்கம்
தினைப்பயிரும்—சொல்லடி மயிலே

இரண்டாவது—ஏலேலோ
மாதத்திலே—ஆமடி தங்கம்
மாதத்திலே—சொல்லடி மயிலே

இரு சுருளாம்—ஏலேலோ
தினைப் பயிரும்—ஆமடி தங்கம்
தினைப்பயிரும்—சொல்லடி மயிலே

மூன்றாவது—ஏலேலோ
மாதத்திலே—ஆமடி தங்கம்
மாதத்திலே—சொல்லடி மயிலே

காகம் வந்து—ஏலேலோ
தினையழிக்கும்—ஆமடி தங்கம்
தினையழிக்கும்—சொல்லடி மயிலே

யாராரை—ஏலேலோ
காவல் வைப்போம்—ஆமடி தங்கம்
காவல் வைப்போம்—சொல்லடி மயிலே

அசலானை—ஏலேலோ
காவல் வைத்தால்—ஆமடி தங்கம்
காவல் வைத்தால்—சொல்லடி மயிலே

அடிமடியில்—ஏலேலோ
கதிர் ஒளிப்பாள்—ஆமடி தங்கம்
கதிர் ஒளிப்பாள்—சொல்லடி மயிலே

உள்ளானை—ஏலேலோ
காவல் வைத்தால்—ஆமடி தங்கம்
காவல் வைத்தால்—சொல்லடி மயிலே

உள் மடியில்—ஏலேலோ
கதிர் ஒளிப்பாள்—ஆமடி தங்கம்
கதிர் ஒளிப்பாள்—சொல்லடி மயிலே

தங்கைதனை—ஏலேலோ
காவல் வைப்போம்—ஆமடி தங்கம்
காவல் வைப்போம்—சொல்லடி மயிலே

# ஆயன் பெருமாள்

பெருமாளின் அருள் கிடைத்தால் பிறகு வாழ்க்கையில் ஒருவிதமான துன்பமும் இராது. அவருடைய கடைக்கண் பார்வை போதும் இகபர சுகங்கள் எல்லாம் கிடைக்கும். ஆழ்வார்கள் அற்புதமான தெய்வப் பாடல்களால் திருமாலின் அருள் வேண்டிப் பாடியிருக்கிறார்கள். அவருடைய அருளால் கிடைத்த பெரியதோர் இன்பத்தைப் பற்றியும், ஆன்ம அனுபவத்தைப் பற்றியும் பாடியிருக்கிறார்கள்.

பெருமாளின் அருளை வேண்டும் நாடோடிப் பாடலும் உண்டு. சேகண்டியையோ மணியையோ அடித்துக்கொண்டு ஆயன் பெருமாள் அருள் தர வேண்டுமென்று ஆசீர்வதித்துப் பாடிக்கொண்டு வருகின்றவனுக்குக் கிராமங்களிலே தாராளமாகப் பிச்சை கிடைக்கும். பாடுகின்றவன் யாராக இருந்தாலும், அவனால் பாடப்படுகின்ற பெருமாள் கருணாமூர்த்தியல்லவா? அவருடைய கருணை கிடைக்கும் என்பது மக்களின் நம்பிக்கை.

ஆடுமாடு பெருகவேணும்—ஆயன் பெருமாளே
ஆதீனங்கள் பெருகவேணும்—ஆயன் பெருமாளே

பட்டிமாடு பெருகவேணும்—ஆயன் பெருமாளே
பால்பானை பொங்கவேணும்—ஆயன் பெருமாளே
வாரணம்போல் வளரவேணும்—ஆயன் பெருமாளே
வாயிலெல்லாம் சந்நிதிபோல்—ஆயன் பெருமாளே
மக்கள்மனை வாழவேணும்—ஆயன் பெருமாளே
மகிமையெங்கும் வளரவேணும்—ஆயன் பெருமாளே
செய்யும் தர்மம் கூடவரும்—ஆயன் பெருமாளே
செல்வமெல்லாம் கூடவருமோ—ஆயன் பெருமாளே
திருப்பதி பகவான் அருள் கொடுப்பார்—ஆயன்
பெருமாளே
சீரும் சிறப்பும் பெருகவேணும்—ஆயன் பெருமாளே

பெருமாளே மாடு மேய்க்கும் ஆயன். ஆதலால் ஆடு, மாடு பெருக வேண்டும் என்று அவனிடத்திலே கேட்பது மிகப் பொருத்தமல்லவா?

ஆயன் பெருமாளிடம் வரங்கேட்கும் இந்தப் பாடலிலே வேறொரு பெரிய உண்மையும் பேசப்படுகிறது. பிச்சை கேட்க வருகிறவன் புத்திசாலிதான். ஆதலால் அவன் இந்த உண்மையையும் இடையிலே நினைவூட்ட விரும்புகிறான். அதனால் அவனுக்கும் லாபம்; கேட்கிறவனுக்கும் லாபம்.

வாழ்க்கை முடிவடைகின்ற காலத்திலே செல்வமெல்லாம் கூட வராது; ஒருவன் செய்த தர்மங்களே அவனுக்குத் துணையாக வரும். ஆதலால் வாழ்க்கை வசதியிருக்கும்போதே தருமம் செய்து கடைவழிக்கு நல்ல பலமான துணை தேடி வைத்துக்கொள்ள வேண்டும். இந்த உண்மையை ஆயன் பெருமாள் பாட்டுக்காரன் எடுத்து ஓதுகிறான். இதை அவன் உபதேசம் செய்வதுபோலச் சொல்லவில்லை. ஆயன் பெருமாளிடம் வரம் கேட்கும் அதே பாங்கில் இதையும் கூறிவிடுகிறான். அவன் கெட்டிக்காரன் என்பதில் ஐயமில்லை,

# தெய்வ முகம்

வாழ்க்கையிலே எத்தனையோ சிரமங்கள் ஏற்படுகின்றன. இந்த வாழ்க்கையை ஒரு வறண்ட பாலை என்று கூடச் சொல்லுவார்கள். பாலையிலே ஆங்காங்கே தோன்றுகிற பசுமையைப்போல இன்பங்களும் இடையிடையே இருந்தாலும் துன்பங்கள்தாம் அதிகம் என்று பல பேர் சாதிப்பார்கள். வாழ்க்கை இன்பமயமானதுதான். ஆனால், மனிதன் தனது சுயநலத்தாலும், குறுகிய நோக்கத்தாலும் அதைத் துன்பம் நிறைந்ததாகச் செய்துவிட்டான் என்று வேறு சிலர் கூறுவார்கள்.

வாழ்க்கையில் பலவிதமான சோதனைகளும், இடர்ப்பாடுகளும் இல்லாவிட்டால் மனிதன் முன்னேற்றப் பாதையில் அடியெடுத்து வைத்துத் தன் வாழ்க்கையின் லட்சியத்தை அடையமாட்டான்; ஆதலால் இந்தத் துன்பங்கள் அவனுக்கு நல்லதே என்று சிலர் தத்துவ ஆராய்ச்சியில் இறங்குவார்கள். பற்றற்ற நிலையிலே மனிதன் தன் கடமைகளைச் செய்துகொண்டிருந்தால் அவனை எவ்விதமான துன்பமும் அணுகாது என்று உபதேசம் செய்பவர்களும் உண்டு.

எளிய மக்களுக்குத் தங்கள் துன்பங்களை மறந்து மன அமைதி பெறுவதற்கு ஒரு நல்ல வழி தெரிந்திருக்கிறது. கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்ற பழமொழி நம் நாட்டிலே தோன்றியிருக்கிறது. கோயில் மனிதனுக்குச் சாந்தியளிக்கும் புனிதமான நிலையம் என்று கண்டிருக்கிறார்கள்.

மக்கள் கோயிலுக்குச் சென்று இறைவன் மேல் தங்கள் வாழ்க்கைச் சுமையையெல்லாம் போட்டுவிட்டு ஆறுதல் பெறுகிறார்கள். இறைவன் கருணைக் கடலாக விளங்குகிறான் என்ற நம்பிக்கையிலே அவர்கள் அவனுடைய சந்நதியிலே புதியதோர் வலிமையும், உற்சாகமும் அடைகிறார்கள்.

இறைவன் எங்கும் நிறைந்தவன். இந்த உண்மையை எல்லோரும் பரிசோதித்து அறிந்து கொள்ளவில்லை. அது எல்லோராலும் முடியக்கூடியதல்ல. ஆனால், பல சான்றோர்கள் கூறிய மொழிகளிலிருந்து மக்கள் அதை நம்புகிறார்கள். அங்கு இங்கு என்று குறிப்பிட்டுக் கூற முடியாதபடி அவன் எங்கும் பிரகாசமாக இருக்கிறான். அவன் வெளியிலே இருக்கிறான்; உள்ளத்திலும் இருக்கிறான். ஆதலால் அவனுக்குத் தெரியாததொன்றுமில்லை. எனவே, அவனிடத்தில் எதையும் மறைக்க முடியாது.

உள்ளத்திலே மறைந்து கிடக்கின்ற எத்தனையோ உணர்ச்சிகளால் மக்கள் பாதிக்கப்பட்டு அல்லல்படுகிறார்கள். அந்த உணர்ச்சிகளைப்பற்றியெல்லாம் வெளிப்படையாக யாரிடத்திலாவது கூறிவிட்டால் ஓரளவு ஆறுதல் கிடைக்கும் என்று மனத் தத்துவர்கள் கண்டிருக்கிறார்கள். ஆனால், உள்ளத்திலே தோன்றுகிற உணர்ச்சிகளை யெல்லாம் வெளியிலே சொல்ல முடிகிறதா? சொன்னால் இழிவு வந்துவிடாதா? உள்ளத்தைத் திறந்து காண்பிப்பது என்பது அவ்வளவு எளிய காரியமல்ல.

இறைவனிடத்திலே உள்ளத்தைத் திறந்து காண்பிப்பது எளிது. அவனுக்குத்தான் எல்லாம் தெரியுமே! ஆதலால்

அவனுக்கு முன்னால் நின்று ஆறுதல் பெறலாம். மன அமைதி பெறுவதற்கு அவனுடைய முக தரிசனத்தைவிடச் சிறந்தது வேறொன்றுமில்லை.

தெய்வ முகம் காணவேண்டும் என்று மக்கள் ஆசைப் படுவதை நாடோடிப் பாடலிலும் நாம் அறியலாம்.

கிராம தேவதைகளிலே மாரியம்மனுக்குத் தனிப்பட்ட திருவிழாக்கள் உண்டு. முத்துப் பல்லக்கிலே மாரியம்மன் பவனி வருவதைப் பார்த்து மக்கள் களிப்பெய்துவார்கள்.

மூன்று மலையிலே கல்லுருட்டி
முத்துக் குடத்திலே பால் காய்ச்சி
காய்ச்சின பாலும் கசக்குதென்பாள்
கைவிட்ட தேனும் புளிக்குதென்பாள்

நாலு மலையிலே கல்லுருட்டி
நாக சரத்திலே பால் காய்ச்சி
காய்ச்சின பாலும் கசக்குதென்பாள்
கைவிட்ட தேனும் புளிக்குதென்பாள்

தங்க முக்காலிபோட் டல்லவோ
தைலம் தேச்சுத் தலை முழுகி
தங்கத்து நம்மூர் மாரி யாத்தாள்
தங்கப் பல்லாக்குமேல் ஏறிவராள்

பொன்னு முக்காலி போட் டல்லவோ
புனுகு தேச்சுத் தலை முழுகி
பொன்னான நம்மூர் மாரி யாத்தாள்
பொன்னுப் பல்லாக்குமேல் ஏறிவராள்

ஒருத்திக்கு வாழ்க்கையே கசக்கிறது. காய்ச்சின பாலும், கையால் தொட்ட தேனும் பிடிக்கவில்லை. பாலும், தேனும் கசக்கும்படி அவளுக்கு வாழ்க்கையில் வெறுப்பு.

மாரியம்மன் பல்லக்கில் பவனி வருகிறுள் என்கிற சேதியை அவளிடம் மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறுர்கள். அந்தச் சேதி அவளுக்குப் புதிய உயிர் கொண்டு வருகிறது. பொன்னுன மாரியம்மன் அவளுடைய துன்பத்தையெல்லாம் போக்காதிருப்பாளா?

மாரியாத்தாக்காரன் என்று ஒருவன் கிராமத்திலே காட்சியளிப்பான். தலையிலே ஒரு சிறு பெட்டியிலே மாரி யாத்தாளின் உருவமிருக்கும். பம்பை என்கிற ஒரு வாத்தி யத்தை பூம் பூம் என்று வாசித்துக்கொண்டு அவன் வருவான். பெட்டியை ஊர்ச்சாவடிக்குப் பக்கத்திலே வைத்துவிட்டு வாத்தியத்தை முழக்குவான்? மாரியம்மனின் பெருமையைப் பாட்டிலே தெரிவிப்பான்.

ஆதிபராபரியே ஆளவந்த ஈஸ்வரியே
ஆயிரங் கண்ணுலே ஆளவந்த ஈஸ்வரியே
கூடத் துணையிருந்து ஈஸ்வரியே காருமம்மா
பக்கத் துணையிருந்து ஈஸ்வரியே காருமம்மா
ஆருகடன் நின்ருலும் மாரி கடனுகாது
மாரி கடன் தீர்த்தவர்க்கு மனக் கவலை தீருமம்மா
தாய் படி தந்தவர்க்குச் சங்கடங்கள் தீருமம்மா
மாரி படி தந்தவர்க்கு மனக் கவலை தீருமம்மா

மாரியாத்தாக்காரனுடைய சிறிய பெட்டியிலேயும் தெய்வ முகம் கண்டு மக்கள் ஆறுதல் பெறுவார்கள்.

# மதுரைச் சொக்கர்

அருமையாக ஒரு பொருள் கிடைத்தால் அதைப் பத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்ற ஆசை உண்டாகிறது. அதைப் பார்த்துப் பார்த்து உள்ளம் மகிழ்ச்சி அடைகிறது. தான் மட்டும் இவ்வாறு இன்பம் அனுபவிக்க வேண்டும் என்று தோன்றுகிற ஆசை ஒரு வகை.

தனக்கு மிக விருப்பமானதைத் தன் அன்புக்குப் பாத்திர மானவர்களுக்குக் கொடுத்து அவர்கள் மகிழ்ச்சியடைவதைப் பார்த்து உள்ளம் பூரிப்பது மற்ருெரு வகையான ஆசை.

தாய்க்கு ஒரு நல்ல மாம்பழம் கிடைக்கிறது. அதை அவளே உண்ண விரும்புவதில்லை. குழந்தைக்குக் கொடுக்க வேண்டும் என்று ஆசைப்படுகிருள்.

சிறுவன் தனக்குக் கிடைத்த விளையாட்டுக் கருவியைத் தன் தோழனுக்குக் கொடுக்க விரும்புகிருன்.

காதலன் தன் காதலியை நினைக்கிருன். அவளுடைய மகிழ்ச்சியிலே அவன் பெரியதோர் இன்பங் காண்கிருன். தனக்கு அருமையாகத் தோன்றுகின்றவற்றையெல்லாம்

அவன் தன் காதலிக்கு வழங்க நினைக்கிறான். அந்த நினைப்பிலே அவனுக்கு அளவில்லாத இன்பம் பிறக்கிறது.

இதைவிட உயர்ந்த இன்பம் ஒன்று இருக்கிறது. இறைவனுக்கு அளித்துப் பெறுகின்ற இன்பம் அது.

எல்லாம் தருகின்றவன், எல்லாம் நிறைந்தவன் இறைவன். அவனுக்கு நாம் கொடுக்கக் கூடியதொன்று மில்லை. ஆனால், நமக்குப் பிரியமானதை அவனுக்கு அர்ப்பணமாகக் கொடுப்பதிலே ஒரு தனிப்பட்ட இன்பம் இருக்கிறது. அவன் கொடுத்ததைத் திருப்பி அவனுக்குக் கொடுப்பதேயானாலும் அதில் எல்லையற்ற இன்பம் பொங்குகிறது.

ஒரு பெரியவர் எண்ணிப் பார்த்தார். கடவுளுக்குக் கொடுக்கக்கூடியது தன்னிடத்திலே என்ன இருக்கிறது என்று ஆராய்ந்தார். எந்தப் பொருளைப் பார்த்தாலும் அது கடவுள் கொடுத்ததாக அவருக்குத் தோன்றியது. தாமாகவே உண்டாக்கிக்கொண்ட பொருளாகப் பார்த்துக் கடவுளுக்குக் கொடுக்க வேண்டும் என்பது அவருடைய ஆசை. மேலும் மேலும் ஆராய்ச்சியிலே இறங்கினார். தமது உடைமைகளையெல்லாம் ஒவ்வொன்றாக எண்ணிப் பார்த்தார்.

கடைசியிலே அவருக்கு வெற்றி கிடைத்தது. கடவுள் கொடுக்காமல் அவரே சம்பாதித்துக்கொண்டவை சில அவரிடத்திலே இருப்பதை அவர் கண்டு பிடித்துக்கொண்டார். உடனே கடவுளின் கோயிலுக்கு ஓடினார். "அப்பனே, இதோ எனக்கே சொந்தமான பொருள்களை உனக்குக் காணிக்கையாகக் கொண்டு வருகிறேன். இவற்றை ஏற்றுக் கொள். நான் செய்த கொடுமைகள், தீமைகள், பாவங்கள் எல்லாம் எனக்கே உரியவை. நீ அவற்றை எனக்குக் கொடுக்கவில்லை. அவற்றை உனக்கு அர்ப்பணம் செய்கிறேன்" என்று அவர் உள்ளம் உருகிக் கூவினாராம்.

இறைவனுக்குக் கொடுக்கக்கூடிய நல்ல பொருள்கள் எதுவும் அவனருளால் கிடைக்காமல் நமது தனியுரிமையாக

வாய்ப்பதில்லை. இருந்தாலும் அவன் கொடுத்ததையாவது திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று தோன்றுகிற எண்ணம் பெரிதல்லவா?

அந்த எண்ணம் நம்மைப் புனிதமாக்குகிறது; உயர்வடையச் செய்கிறது. தான் பெற்ற இன்பம் உலகம் பெற வேண்டும் என்று ஆசைப்படுகிற உள்ளப்பாங்கு எளிதில் அமைவதில்லை. இறைவனுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும் என்கிற ஆசை இந்த உள்ளப் பாங்கை அமைப்பதற்கு வழி செய்கிறது. இறைவனுக்குக் கொடுக்க நினைக்கிறவன் அந்த இறைவன் உறைகின்ற உயிர்களிடத்திலே அன்பு காட்டுவதில் முனைகிறான். ஆருயிர்களுக்கெல்லாம் அன்பு செய்ய வேண்டும் என்று அவன் உறுதி கொள்ளுகிறான். இது இரண்டாவது படி. இந்தப் படியில் கால் வைத்தவன் உண்மையான முறையில் இறைவனை வழிபடுகின்றவன் ஆகிறான். ஆனால், முதற் படியையே காணாதவனுக்கு இரண்டாம் படியில் கிடைக்கும் இன்பம் தெரியாது.

ஒருவனுக்கு ஒரு அழகிய மலர் கிடைக்கிறது. எத்தனையோ சிரமங்களுக்குப் பிறகு அது கிடைக்கிறது. அதை அவன் தன் காதலிக்குக் கொடுக்க நினைக்கவில்லை. அவளுக்குக் கொடுத்து அதனால் அவளும் அவனும் அடைகின்ற மகிழ்ச்சியைவிடப் பெரியதோர் இன்பத்தை அவன் பெற விரும்புகிறான். காதலியும் தானுமாகச் சென்று வடமதுரைச் சொக்கருக்கு அதை அர்ப்பணம் செய்ய அவன் எண்ணுகிறான்.

எத்தனையோ வகையான திருவிளையாடல்கள் புரிகின்றவர் அந்தச் சொக்கர். அவருக்கு இல்லாததொன்றுமில்லை; இருந்தாலும் கிழவியின் பிட்டுக்கு ஆசைப்பட்டுப் பிரம்படி தின்கிறவரல்லவா? அவருக்கு அர்ப்பணம் செய்வதில் உள்ள பேரின்பத்தை அவன் எப்படியோ உணர்ந்து கொண்டான். ஆதலால் மலரை விரும்பும் காதலியை அழைத்துக்கொண்டே சொக்கருக்கு அம்மலரைச் சூட்ட அவன் விழைகின்றான்,

ஏழுமலை கடந்து—பெண்ணே
எடுத்து வந்தேன் செண்பகப் பூ
வாடாமலே சூட்டிடுவோம்—நாமும்
வடமதுரைச் சொக்கருக்கே

காதலிக்குச் சூட்டுவது இன்பம்; கடவுளுக்குச் சூட்டுவது மிகமிகப் பெரிய இன்பம். கடவுளைப் பற்றிய நினைவிலே காதலும் நிறைவெய்துகிறது என்பதை அறிந்து கொள்வது வாழ்க்கையின் பெரிய சாதனையல்லவா?

